ஸ்ரீ:



ஸ்ரீமதே இராமானுஜாய நம:

# தென்திருப்பேரை
# ஸ்ரீ மகர நெடுங்குழைக்காதர் கலம்பகம்




ஆசிரியர்:

**கவி. ஸ்ரீ. நாராயண குண்டல தீக்ஷிதர்.**





உரையாசிரியர்:

**அலங்காரம் தேவராஜய்யங்கார்.**



THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF
TIRUMALA TIRUPATI DEVASTANAMS
UNDER THEIR SCHEME
"AID TO PUBLISH RELIGIOUS BOOK."

ஸ்ரீ :

# அணிந்துரை.

'' வித்யா விசாரத '' '' திவ்யார்த்த ரத்ன நிதி ''
**S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L., Advocate,**
ஆசிரியர், ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம்,
No. 3-B, புத்தூர் அக்ரஹாரம்,
திருச்சிராப்பள்ளி.

ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டு ஆகும். அவற்றில் நவ திருப்பதி களில் ஒரு திருப்பதியாய் விளங்குவது தென்திருப்பேரை. இத் திருப்பதியில் முத்தமிழ்த் துறையில் முறை போகிய விற்பன்னர் களாக பல சான்றோர்கள் வாழ்ந்து வந்திருக்கின்றனர். அவர்களில் பூர்வ சிகை ஸ்ரீ வைஷ்ண குலத்தில் அவதரித்தவராய் ஜைமினிய சாம வேதத்தை ஓதியவரான நாராயண குண்டல தீக்ஷிதர் என்பவர் சுமார் நான்கு நூற்றாண்டுகளுக்கு முன் இங்கு வாழ்ந்த பெரும் புலவராவர். அவர் மகர நெடுங் குழைக்காதர் பாமாலை யந்தாதி, குழைக்காதர் கலம்பகம் முதலான பல தமிழ் நூல்களை இயற்றியவர். பாமாலையந்தாதியை, புகழுடைப்பாளரான ஆசுகவி T. N. கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமியின் குறிப்புரையோடு அடியேன் வெளியிட்டிருக்கிறேன். அந்நூலின் முன்னுரையில் இந்நூலாசிரிய ரைப்பற்றிய பல விபரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

நாராயண குண்டல தீக்ஷிதருடைய மற்றொரு சிறந்த நூலான குழைக்காதர் கலம்பகத்தை தமிழில் பெரும் புலமையுள்ள வரும், தமது நண்பருமான அலங்காரம் தேவராஜ ஐயங்கார் ஸ்வாமி இப்போது தம் குறிப்புரையோடு வெளியிடுகிறார். கலம்பகத்திற் குரிய எல்லா இலக்கணங்களும் இந்நூலில் நிறைந்திருப்பதையும், இதிலுள்ள பாடல்களின் சொற்சுவை பொருட்சுவைகளையும் உரை ஆசிரியர் தமது உரையில் அழகாக எடுத்துக்காட்டியிருக்கிறார்.

இவ்வுரை ஆசிரியருடைய உரையுடன் கூடிய சோலைமலைக் குறவஞ்சி, பரப்பிரம்ம விவேகம், ஆண்டாள் சந்திர கலா மாலை ஆகிய சிறந்த தமிழ் நூல்களை அடியேன் வெளியிட்டிருக்கிறேன். இது தவிர ஸ்ரீவில்லிபுத்தூர் மான்மியம் என்ற உரைநடை நூலும் சுவாமியால் வெளியிடப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டு முன்னாள் முதல்வர் மாண்புமிகு M. G. இராமச்சந்திரன் அவர்களால் சிறந்த தமிழறிஞர் என்று பாராட்டுப் பெற்றவர் சுவாமி. இருசமய விளக்கம் முதலான மற்றும் பல தமிழ் நூல்களையும் உரையுடன் வெளியிடப் பாரித்திருக்கிறார் ஸ்வாமி.

இந்தக் குழைக்காதர் கலம்பகத்தை, தமிழன்பர்களும் வைணவ அன்பர்களும் பெற்றுப் படித்துப் பயன்பெற்று ஸ்வாமிக்கு உற்சாகமூட்டி அவருடைய பாரிப்புகளை நிறைவேற்றவேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ வைஷ்ணவதாசன்
S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L., Advocate,
சுதர்சனம் ஆசிரியர்.
3-B, புத்தூர் அக்ரஹாரம்,
திருச்சி - 17.

ஸ்ரீ :

# முன்னுரை.

திருமால் திருப்பதிகள் நூற்று எட்டு. இத்திவ்விய திருத் தலங்கள் மயர்வற மதிநலம் அருளப்பட்ட ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப் பெற்றவை. அவற்றுள் திருவழுதி வளநாடு என்ற தென்பாண்டி நாட்டில் தாம்பிரவருணி நதியின் இருகரையிலு முள்ள நவதிருப்பதிகளில் ஒன்று தென்திருப்பேரைமாநகரம். இதனை, தென்திருப்பேரெயில் என்றும் கூறுவர்.

இந்நகரினை 'அரிபதம்' என்றும், பேராபுரி என்றும் வட மொழித் தலபுராணம் கூறும். இத்திருப்பதியில் எழுந்தருளி இருக் கும் திருமாலின் திருநாமம் மகரபூஷணப் பெருமாள் என்பது. இது வடமொழித் திருநாமம். மகரநெடுங்குழைக்காதன், நிகரில் முகில் வண்ணன் என்பன தமிழ்த் திருநாமங்கள். ''மகரநெடுங்குழைக் காதன் மாயன் நூற்றுவரை அன்று மங்கநூற்ற, நிகரில் முகில் வண்ணன்'' என்று செந்தமிழ் மாறன் தந்தருளிய தென்திருப் பேரைப் பதிகத்தில் இத் திருநாமங்கள் பயிலக் காணலாம். திருவாய் மொழியில், 'வெள்ளைச் சுரிசங்கொடு ஆழி ஏந்தி' என்ற பதிகம் இவ்வெம்பெருமானைப் பற்றியதே. ''அன்றிவ் வையகமுண்ட வாயனை மகரக் குழைக்காதனை'' என்றும், 'மகரம் சேர் குழை இரு பாடிலங்கியாட'' என்றும், ''கண்டேன் கனமகரக் குழையிரண்டும் நான்குதோளும்'' என்றும், ''மின்னுமணிமகர குண்டலங்கள் வில் வீச'' என்றும் எம்பெருமானின் மணிமகர குண்டலத்தின் அழகுக் குத் தோற்றுப் பேசுவர் திருமங்கையாழ்வார். ''மகரக்குழைசேர் சுந்தரத் தோளனுக்கோ'' என்பர் கம்பர் பெருமான்.

> ''அரசாகி வையமுழு தாண்டாலும் இன்பக்
> கரைசார மாட்டார்கள் கண்டீர் - முரசாரும்
> தென்திருப்பே ரைப்பதியான் சீர்கேட்டு நாவிலவன்
> தன்திருப்பே ரைப்பதியா தார்''.

என்பது திவ்விய கவி பிள்ளைப்பெருமாள் ஐயங்காரின் திருவாக்கு.

இவ்வாறு பெருமை பெற்ற தென்திருப்பேரை மாநகரில் சுமார் 360 ஆண்டுகளுக்கு முன் தோன்றியவர் நாராயண குண்டல

தீக்ஷிதர். இவர் பூருவசிகை ஸ்ரீ வைஷ்ணவர். தலவகார சாம வேதியர் மரபினர். கருவிலே திருவுடைய இவர் கவி பாடும் ஆற்றல் மிக்கவர். தெய்வ பக்தி நிறைந்தவர். இப் பெரியாரால் இயற்றப்பெற்றதே இக்கலம்பகம்.

தமிழறிஞர் பலரைத் தந்த ஊர் தென்திருப்பேரை. இவ்வூரி லுள்ளோரில் பெரும்பாலோர் நில வருவாயைக் கொண்டு வாழ்ந்து வந்தனர். அவர்களில் நாராயண குண்டல தீக்ஷிதரும் ஒருவர்.

ஒரு சமயம் வானம் பொய்த்தது. வறட்சி மிகுந்தது. அவ் வூரினரால் அரசுக்குரிய நிலவரி கட்ட இயலவில்லை. அரசிறை கொடாதவர்களை அதிகாரிகள் சிறையில் அடைத்தனர். அதில் நாராயண தீக்ஷிதரும் ஒருவர்.

திங்கள் ஒன்றுகச் சிறையிருந்தார் தீக்ஷிதர். தன்னுடன் சிறையில் வாடுபவர் துயரங்கண்டு மனம் நொந்தார் தீக்ஷிதர். அத்துயர் நீங்க மகரக்குழையனை வேண்டினர். மகரக்குழை சேர் சுந்தரத் தோளனைப் பாலேய் தமிழிற் பாமாலை பாடித் துதித்தார். பரந்தாமனும் அருள் புரிந்தான். பக்த பராதீனன் அருளால் தீக்ஷித ரும், உடன் சிறையிலிருந்தோரும் விடுதலை பெற்றனர். தீக்ஷிதர் பாமாலை பாடிய பாவலரானர்.

இப்பாமாலையின் மகிமையை உணர்ந்த மஹா மஹோபாத்தி யாய தக்ஷிணத்திய கலாநிதி டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரவர் கள் தமது முகவுரையுடன் 1939-ல் இப்பாமாலையைப் பதிப்பித்தார். இதன் இரண்டாம் பதிப்பு 1947-ல் வெளிவந்தது. அதன் பின் 1967-ல் தென்திருப்பேரை T. N, கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமியால் ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம் வெளியீடாக உரையுடன் வெளியிடப் பெற்றது. அதன்பின் 1987-ல் ஒரு பதிப்பு வெளிவந்திருக்கிறது. இதிலிருந்தே இவ்வாசிரியரின் பெருமையைக் காணலாம்.

இவ்வாசிரியர் சிறையினின்று விடுதலை பெற்ற பின் பாடி யதே இக்கலம்பகமாகும். இது செவிவழிச் செய்தி. தென்திருப் பேரையில் வீற்றிருந்தருளும் மகரநெடுங் குழைக்காதரைப் பற்றிப் பாடிப்தொரு நூலாகையாலே 'குழைக்காதர் கலம்பகம்' என்ப் பொலிகிறது.

குழைக்காதருக்குக் கலம்பகம் பாடியவர் இருவர். ஒருவர் நாராயண குண்டல தீக்ஷிதர். மற்றவர், அபிநவ காளமேகம் எனப் புகழ் பெற்ற அனந்தகிருஷ்ணய்யங்கார் சுவாமி. முன்னவர் பாடியது. 'குழைக்காதர் கலம்பகம்'. பின்னவர் பாடியது 'திருப்பேரைக் கலம்பகம்' திருப்பேரைக் கலம்பகம் T. N. மகரபூஷணம் ஐயங்கார் B A., B.L.. Advocate அவர்களால் 1937-ம் ஆண்டு பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது. நாராயண குண்டல தீக்ஷிதரால் பாடப்பெற்ற குழைக்காதர் கலம்பகம் இதுவே முதற்பதிப்பாகும்.

இனி, கலம்பகம் - கலப்புள்ளது. அதாவது, ஒருபோகும், வெண்பாவும், கலித்துறையும் முதற்கவி உறுப்பாக முதலிற் கூறி, புயவகுப்பு, மதங்கு அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊஞ்சல் என்னும் பதினெட்டு உறுப்புக்களும் இயைய மடக்கு, மருட்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை என்னும் இவற்றால் இடையிடையே வெண்பாவும் கலித்துறையும், வணைணமும் விரவிவர அந்தாதித் தொடையால் பாடுவதாகும்.

"களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த அலங்கலந் தொடையல்" என்ற ஆழ்வார் பாசுரத்தில், பலவகை மலர்களைக் கொண்டு தொடுக்கப்பட்ட மாலை கலம்பகம் புனைந்த தொடையல் எனக் கூறப்பட்டுள்ளதனால், அப்பூமாலைபோல பலவகைப் பாக்களைக் கொண்டு தொடுக்கப்பட்ட பாமாலையைக் கலம்பகம் என்று வழங்கினர் ஆன்றோர்.

தொல்காப்பியச் செய்யுளியலில், "விருந்தேதானும், புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்ற சூத்திரத்துள் இக்கலம்பகம் அடங்கும்.

இக்கலம்பகத்தின் "சொன்னோக்கும், பொருள் நோக்கும், தொடை நோக்கும், துறையின் நோக்கொடந் நோக்கும்" கற்போர் உள்ளத்தைக் கவர்கின்றது. இவ்வாசிரியர், தமிழ்மொழியோடன்றி வடமொழியிலும் புலமைமிக்கவர் என்பதை இக்கலம்பகத்தில் வரும் "பராங்குசக் களிறு, பவவிலங்கு, மந்தமாருதம், களபலேபனம், ஞானவரோதயன்" என்ற வடமொழிச் சொற்றொடர்களைக் கொண்டு அறியலாம்.

இவையேயன்றி கவுளம், பிரளயம், அளிந்தனை, மாகம், சஞ்சரித்து, களிம்பம், உரிசைமா, அதிக்கும்பசி, சிறுசோறு என்பன போன்ற மலையாள வழக்கச் சொற்களையும் இதனிடையே காணலாம்.

இவ்வாசிரியர் வண்ணம் பாடுவதில் வல்லவர் என்பதை இந்நூலில் வரும் வண்ணங்களைக் கொண்டு தெளியலாம். பொதுவாக; "நல்ல சிங்காரம் வீரம் நகை சாந்தம் கருணை குற்சை, ஒல்லுமற்புதம் பயத்தோடுறு கோபம் இரதம் ஒன்பான்" (சூடாமணி நிகண்டு) என்றபடி ஒன்பான் சுவையும் ஒருங்கே அமையப்பெற்ற ஒப்பற்ற நூலாக விளங்குகிறது இக்கலம்பகம்.

இச்சீரிய நூலின் ஆசிரியர் வழித்தோன்றலான தென் திருப்பேரை ஆசுகவி T. N. கிருஷ்ணய்யங்கார் சுவாமியால் எழுதப்பெற்ற கொளுவுடனும் சிறு குறிப்புடனும் கூடிய கையெழுத்துப் பிரதியொன்றை ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம் ஆசிரியர் ஸ்ரீ. உ.ப. வே. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் M.A.,B.L., Advocate ஸ்வாமி அடியேனிடன் கொடுத்து தெளிவான உரை ஒன்று எழுதும்படி நியமித்தருளினர். அன்னார் நியமனத்தை என்றும் மீருதவனுகிய அடியேன் தமிழ்த் தொண்டாகக் கருதி இந்நூலுக்கு விரிவான குறிப்புரை ஒன்று எழுதி வெளியிடுகிறேன். இவ்வுரையிலுள்ள குற்றங்களைந்து குணத்தை ஏற்று பிழை பொறுத்தருளப் பெரியோர்களின் பொன்னடி போற்றி இதனை நிறைவு செய்கிறேன்.

இந்நூல் வெளிவர எனக்கு ஊக்கம் கொடுத்து அணிந்துரையும் வழங்கிய ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம் ஆசிரியர் ஸ்ரீ. உ.ப. வே. S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A.,B.L., Advocate அவர்களுக்கும்; திருமாலுக்குத் திருத்தொண்டு செய்யவே என்னை ஈன்றெடுத்து,

> பாலூட்டி என்தன் பசியாற்றி பைந்தமிழால்த்
> தாலாட்டி யுப் வளர்த்த தாய்தனக்கும் - மேலான
> தண்டமிழை என்நெஞ்சில்த் தங்கவைத்த தந்தைக்கும்
> உண்டுகொலோ கைமாறு தான்.

என்றவாறு என் அன்னை தந்தையர் திறத்தும் அடியேன் 'தலையல்லால் கைமாறிலேனே' என்று கூறுவதைத் தவிர வேறொன்றுமறியேன்.

இதுவரை வெளிவராத இக்கலம்பகத்தை அச்சிடுவதற்கு நிதி உதவி அளித்த திருமலை - திருப்பதி தேவஸ்தானத்தாருக்கு எனது உளங்கனிந்த நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீ வைஷ்ணவதாசன்,
**அலங்காரம் தேவராஜன்.**

ஸ்ரீ:
திருஞான முத்திரை துணை.

கவி; ஸ்ரீ நாராயண குண்டல தீக்ஷிதர் இயற்றிய



# குழைக்காதர் கலம்பகம்.



## நம்மாழ்வார் காப்பு.

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.*

செவிதொறும் கசிந்த செந்தேன்
 தெளிந்தசொற் கவுளம் சேர்க்கும்
புவிதுதிக் கையால் பேரா
 புரிக்கதம் பகத்தை மோக்கும்
பவவிலங் ககற்றும் புள்ளின்
 பாகனைப் படர்ந்து பார்க்கும்
கவிமதம் பொழியும் ஞான
 பராங்குசக் களிறு காக்கும்.

---

உரை ஆசிரியர் :- அலங்காரம் தேவராஜ ஐயங்கார்
ஸ்ரீவில்லிபுத்தூர்.

---

குறிப்புரை.

கவுளம் - யானையின் கவுள் கொள்ளும் உணவு. புவிதுதிக் கையால் - நிலம் தொட்டும் நீண்ட புழைக்கையினால்; உலகத்தில் உள்ள பெரியோர் அனைவரும் புகழ்கையினால் என இருபொருள் கொள்ளும்படி வந்தது. பேராபுரதென்திருப்பேரெயில் மா நகரம். கதம்பகம் - கலம்பகம். பவ விலங்கு - பிறப்பாகிற தளை. புள்ளின் பாகன் - பறவைக்கரசனாகிய கருடனை வாகனமாக ஏறிச் செலுத்து பவன். 'புள்ளைக் கடாவுகின்றவன்' (திருவாய் 7. 3. 1.)

நம்மாழ்வார் ஞான தேசிகன் ஆதலின் ஞான பராங்குச களிறு என்று உருவகப்படுத்தினார். களிறு என்றதற்கேற்ப, யானையின் செயலாகிய கவுளம் சேர்த்தல், துதிக்கையால் மோப்பம் பிடித்தல், பாகனைப் பின் தொடர்தல், மும் மதம் பொழிதல், அங்குசம் கோடல் முதலியனவும் தோன்றப்பாடிய நயம் காண்க.

தாம் கவுளம் கொள்ளுதலேயன்றி திருவாய் மொழி என்னும் தேனை வருண பேதமின்றி பாரோர் செவி பருகச் சேர்க்கும் என்றபடி. நன் மணம் அறியும் இயல்பினது ஆதலின் துதிக்கையால் கதம்பகத்தை மோக்கும் என்றார்.

## அவையடக்கம்.

எண்சீர்க் கழிநெடிலடி.

மழைக்காவல் புரிந்துலகம் தழைப்ப நீதி
　　மன்னவன் செங்கோல் இழைப்ப மறைநூல்வாழக்
குழைக்காதர் கலம்பகம்என் றொருபேர் நாட்டிக்
　　கொழித்ததமிழ் சுழித்தெழும்பக் கூறும் பாட்டின்
உழைக்காதல் அடிதொடைசீர் தளைமா றுடி
　　ஒருபொருட்கும் ஒவ்வாதா யினும்என் சொல்லின்
பிழைக்காக இகழுவரோ? பெரியோர் வானப்
　　பிரான்இனிய திருநாமம் பெற்றக் காலே.

(2)

மழை, காவல் புரிந்து என்பது எதுகை ஓசை இனிமைக்காக ஒற்று மிக்கு வந்தது. ''நூலாயிரம் கற்பின் நோக்குங்கால் யாது பயன்? நாலாயிரத்தின் நலம்'' ஆதலின், அப்பிரபந்தத்தின் ஊறித் திளைத்து ஆழ்ந்து பொங்கி வருதலின், இது 'கொழித்த தமிழ் சுழித்தெழும்பக் கூறும் பாட்டு என்கிறார். இதனுள் விரும்பப்பெறும் அடி, தொடை, சீர், தளை இவை யாப்பிலக்கண விதிக்கு மாறாகி இருப்பினும், அகப்பொருள், புறப்பொருள் என்னும் இரண்டு நூல்களினும் பொருந்தாதிருப்பினும், பெரியோர்கள் என் சொல்லின் பிழை நோக்கி இதனை இகழ்ந்து தள்ளமாட்டார். ஏனெனில் பரவாசுதேவனை வானப்பிரானின் இனிய திருநாமமாகிற அஷ்டாக்ஷர திருமந்திரம் இதில் உச்சரிக்கப் பெறுகையாலே, உவந்து கொள்ளுதலைச் செய்வர் என்பது குறிப்பு. ''வானப் பிரானை நம் குலநாதனை'' (பிள்ளைத் தமிழ் காப்பு 4.) ஒப்புக் காண்க.

ஆசிரியர் 'பேராபுரிக் கதம்பகம்' என்று காப்புச் செய்யுளில் கூறினாரேனும், இங்கு 'குழைக் காதர் கலம்பகம் என்று ஒரு பேர் நாட்டி' என்று நிலைநாட்டிக் கூறுதல் கவனிக்கத் தக்கது.

முதலடியில் தழைப்ப - இழைப்ப, இரண்டாமடியில் நாட்டி- பாட்டில் என ஓசை நயம் தோன்றப் பாடுதல் காண்க.

# குழைக்காதர் கலம்பகம்

## நூல்.

### வண்ணக வொத்து தாழிசை அளவடிக் கலிப்பா.

#### தரவு.

பூமாதின் னருள்பொழியப் புவிமாதின் முலைசுரப்பத்
தேமாலை புனைந்தேத்தித் தேவர்களும் சிரம்குனிப்ப

நீதியரும் பியகருணை நிறைகுடமாம் நூற்றெட்டு
வேதியரும் திருப்பேரை வியன்நகரும் செழித்தோங்க

கவிச்செல்வர் மூதறிஞர் கசிந்துருகும் பழம்புலவர்
செவிச்செல்வர் எந்நாளும் செந்தமிழின் தேன்நிறைப்ப

வரிவளைக்கை அரம்பையர்கள் வளக்கவரி எடுத்தியக்கத்
தருமலர்ப்பூந் தாதளைந்து தமிழ்த்தென்றல் அடிவருட

வெளியகத்தே நீண்டுயர்ந்து விளங்குமணித் தூண்நிரையின்
ஒளிகெழுமி இருள்துடைத்த ஓலக்க மண்டபத்துள்

காய்சினத்த கோளரியின் கழுத்துமுக்கச் சுமந்தேந்தும்
ஆசனத்திற் கடவுளருக் கரசெனவீற் றிருந்தனையே.

மங்கல மொழியில் நூல் தொடங்க வேண்டுமாதலின், பூ என்று தொடங்கினர். பூமாது - திருமகள். புவிமாது - நிலமகள். தேமாலை - கற்பகப் பூமாலை. நூற்றெட்டு வேதியர் - தென்திருப்பேரையில் வாழும் ஜைமிநீய தலவகார சாமவேதியரான பூர்வசிகை ஸ்ரீ வைஷ்ணவர் நூற்றெண்மரும். வியன்நகர் - யாநகர். கவிச்செல்வர்-கருவிலே திருவுடையவர். மூதறிஞர்-இயற்கைஞானத்தர். செவிச்செல்வர்-கேள்வி ஞானத்தர். செந்தமிழ்-நாவீறன் பாவாகிய திருவாய் மொழி என்ற பா. கவரி-சாமரை. தமிழ்த்தென்றல்-தமிழ் என்னும் இளந்தென்றல்காற்று. ஓலக்க மண்டபம்-கொலு மண்டபம். கடவுளருக்கு அரசு-வானப்பிரான். ''வானப்பிரான் மணிவண்ணன் கண்ணன்'' (திருவாய் 7-3-2.) என்பதில் நோக்கு.

## அளவடித் தாழிசை.

கோதுபிடித் தரித்தமுதம் கொடுத்தவன்நீ அளைகவர்ந்துன்
சூதுபிடித் தடிச்சுவடு தொடர்ந்துபிடித் தசோதை எனும்
மாதுபிடித் தடிக்குமுனம் மண்ணையுண்ட வாய்மலர்ந்துன்
காதுபிடித் தழுதுமலர்க் கண்வடித்தும் நின்றனையே.

பெருவிருந்தாய் இருவுருவிற் பிறந்துவளர்ந் தெதிர்ப்படுமுன்
அருவிருந்த மதலையைமற் றவுணன்அழித் திடுமென்றுன்
திருவுளந்தான் மிகவிரைந்தே சிறுபொழுதும் ஒருவயிற்றிற்
கருவிருந்து தளராமற் கற்றூணிற் றோன்றினையே.

விரிகடலின் புவியளந்து விசும்பளக்க நின்றுயர்ந்து
தரும்பிரமன் அடிவிழுந்து தலைகவிழ்க்கும் தன்மையைநீ
பெருகிவரும் பிரளயத்துன் பேருருவம் தோன்றாமல்
தருவுருவம் மீனுருவாய்ச் செலுவில்எடுத் தடக்கினையே.

## அராகம் (முடுகியல்) ஈரடிக்கண்ணி.

பயிரவி எனவரு படுகொலை அலகையின்
உயிரையும் முலையுடன் ஒருவழி பருகினை.

பிடியென நொடியினில் பிறைஎயி றொடிபட
வடிமத களிறொடு வலிகொடு பொருதனை.

ஒருபது சிரமொடும் இருபது கரமொடும்
பருவரை புரமிடு பரிபவம் அருளினை.

இதுபொரு ளிதுதவம் இதுகதி எனமுது
சதுமறை யுடனறு சமயமும் அருளினை.

1. அளை - வெண்ணெய். காது பிடித்து - தோற்புக்கரண மிடுதற்கு காதைப் பற்றி.

2. இருஉரு - நரன், சிம்மம் ஆகிய இருவடிவு. அருவு - அருகு. மதலை - தானவ சிசுவான பிரகலாதன். அவுணன் - இரணியன்.

3. தரும் பிரமன் - சிருஷ்டி செய்யும் பிரமனும் என்றபடி. சிறப்பும்மை தொக்கது. செலு - மீன்சிறகு. பயிரவி - காளி. அலகை - பூதனைப் பேய். இலங்கை மன்னன் முடி ஒருபதும் தோள் இருபதும் என்றபடி.

## அம்போதரங்கம்.

மலைகுனிய விசும்பளக்கும் மதிளிலங்கை வழிதெளிப்பச்
சிலைகுனியப் புயம்நிமிரத் திருச்சரம்ஒன் றெடுத்தனையே.

மூவடிகேட் டீரடியால் மூவுலகம் அளந்த செழும்
பூவடியிற் பிறந்தகங்கைப் புனலாடித் திரிந்தனையே.

## நாலடி அம்போதரங்கம்.

துட்டவாள் அரவவடம் தொடக்கவரை இடந்தனையே
வட்டவான் குறளாமை வடிவெடுத்தும் கிடந்தனையே
முட்டவான் முகடதிர முழங்குகடல் கடைந்தனையே
பட்டவரா் அமுதமரா் பசிக்கும்மருந் தடைந்தனையே

## சிந்து முந்து.

மருதொடு சகடமொ டித்தனை
வருமுடி அரவின்ந டித்தனை
பருவரை கவிகைபி டித்தனை
பரிமள துளபமு டித்தனை.

## சுரிதகம்.

மயலும் அருளும்நீ மலரும் மணமும்நீ
இயலும் இசையும்நீ எளிதும் அரிதும்நீ
உயர்வும் இழிவும்நீ உடலும் உயிரும்நீ
புயலும் மினலும்நீ புறமும் அகமும்நீ

(எனவாங்கு) (1)

விசும்பு - வானுலகு. வழிதெளிப்ப - சேதுச்செய்ய. பூவடியிற் பிறந்த கங்கை - திருமால் மலரடியிற் பிறந்த கங்கை. "கன்னி

நீக்கரும் கங்கையுங் கைதொழாப், பன்னி நீக்கரும் பாதகம் பாருளோர்., என்னி நீக்குவர் யானுமின் எற்றந்த, உன்னினீக்கினெ னுய்ந்தனெ னலென்ருள்''. (கம்பர் - கங்கைப் படலம் 17) என்ற பாடல் இங்கு ஒப்புக் காண்க. அரவ வடம் தொடக்க - வாசுகி என்னும் தாம்பு சுற்ற. வரை - மந்திரமலை மருந்து - தேவாமிர்தம்.

## ஆசிரியப் பா.

அரும்பவிழ் குவளையும் சுரும்பவிழ் குமுதமும்
கருங்கொடி வள்ளையும் கமலமும் கலந்து
கண்ணும் வாயும் வண்ணவெண் குழையும்
திருமுகச் செவ்வியும் ஒருமுகப் படுத்திக்
கண்டவர் துவளும் காட்சியிற் றுவளும்
நலன்கிளர் மணிநீர் நன்னீர்ப் பண்ணை
பொலன்கொடி மகளிரின் கலன்கொளின் பேரையில்
மகரக் குழையன் மலரடி வாழ்த்தி
உச்சியிற் ருெழுதகை உடையவர்க் குரியரேல்
வச்சிரத் தடக்கை வருமொரு மன்னனில்
சிறந்து விதிப்படி செங்கோல் நடாத்தி
மதிக்குடை கவிப்பரிம் மண்ணும் மாகமுமே. (2)

குவளை - நீலோத்பலம். சுரும்பவிழ் குமுதம்-வண்டுமுறுக்கு அவிழ்க்கும் செவ்வல்லிபூ. வள்ளை - ஒருவகைக் கொடி. மகளிர் கண்ணுக்குக் குவளையும், வாய்க்குச் செவ்வல்லியும், காதுக்கு வள்ளைக் கொடியும், முகத்துக்குக் கமலப்பூவும் உவமையாதலின் இவற்றைக் காணின் இளைஞரின் அறிவைக் கவரும் என்பது தோன்ற இருக்கும் வயல்சூழ் இன்பேரை என்ருர். மகரக்குழையன் மலரடி வாழ்த்தி - மகரபூஷணப் பெருமாளுக்குத் திருப்பல்லாண்டு பாடி. உடையவர் - இராமானுஜர். உடையவர்க்கு உரியரேல் - ஸ்ரீ வைஷ்ணவராயின்? வச்சிரத்தடக்கை மன்னன் - தேவேந்திரன் மண்ணும் மாகமும் மதிக்குடை கவிப்பர் - ''இலங்கு ஒலி சேர் கொடுமா கடல் வையமாண்டு மதிக்குடை மன்னராய் அடிகூடு வரே'' (பெரியதிரு 2-4-10) என்றபடி உபய விபூதியையும் ஆளுவர் என்றவாறு.

முற் செய்யுளில் பரத்துவமும் சௌலப்யமும் தோன்ற வீற்றி ருந்தருளுதலைக் கூறி, இங்கு தொழுவள் பெறும்பேறு கூறுகின்ருர்.

## வெண்பா.

மாகவலைப் பட்டயர்ந்து மங்கையர்தம் கொங்கையநு
போகவலைப் பட்டயர்ந்தே போகாமல் - நாகவுல
கோன்புரக்கும் நேமிக் குழைக்காதா! உன்கழற்கே
ஆன்புரக்கு மோ?ஒருகா லம். (3)

மாகவலைப்பட்டு அயர்ந்து-மிக்க கவலையால் செயலறவுற்று. அநுபோக வலைப்பட்டு - கைப்பற்றும் ஆசை வலையிற்சிக்கி. நாக உலகோன் - ஆதிசேஷன். புரக்கும் - ஆசனமாகித் தாங்குகின்ற. நேமிக் குழைக்காதா! - ''வெள்ளைச் சுரிசங்கொடு ஆழி ஏந்திய'' மகர பூசணைப் பெருமாள். நின்கழற்கே - உனது திருவடிகளிலேயே. ஆன்பு உரக்குமோ? - இனியாயினும் அன்பு உறைக்குமா? இது எதுகை நோக்கி நீண்டு வந்தது. ஒரு காலம் - ஒரு க்ஷண நேரம் ஆயினும் என்றபடி. போக - போகாமல் முரண்தொடை.

கொளு என்பது-விள்ளரும் செய்யுளின் விழுமிய பொருளினை கொள்ள வைப்பது கொளு எனப்படுமே.

(கொளு)

மயலுறு தலைவியின் அவசமுறு நிலையினை
அயலவர் வினவலின் அன்னைபதில் மொழிதல்.

## கட்டளைக் கலித்துறை.

ஒருகைமுகக் குஞ்சரம் சொன்னபேர் என்றுரைக் கும்பொற்கா
தருகை முகக்கும் அயில்விழி யீர்!அருட் பேறையில்மால்
முருகை முகக்கும் பசுந்தண்டு ழாய்என்னும் மொய்குழலச்
சருகை முகக்கும் இருக்கும் உள்ளாவி தழைக்குமன்றே. (4)

ஒருகை முகக்குஞ்சரம் - கஜேந்திராழ்வான். சொன்னபேர் என்றுரைக்கும் - நாயகன்பேர் கூறுராதலின், ஆதிநாதன் என்னு மல் ஆனைகூவிய பேர் என்கிருள். மால் முருகை முகக்கும் பசுந்தண் துழாய் - ''மகரக்குழைத் திருமால் மார்பிடத்தும், வரைப் புயத்தும் மணம் தழைந்து முயங்கு பைந்தார் வெறித்துளவு'' (55) என்றபடி வேரி ஓங்கும் துழாய். அச்சருகு - அந்த உலர்ந்த சாத்துமறைத் திருத்துழாய் என்றபடி. இருக்கும் - இட்டகால் இட்ட கையளாய் குற்றுயிரோடு இருக்கும். ''வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே'' (திருவிருத்தம்) என்பாராதலின் உள்ளாவி தழைக்கும் என்ற நம்பிக்கையினாலேயே.

(கொளு)

மதியமும் தென்றலும் வருத்துதல் கூறி
பதியே யங் கணைனப் பாவைதான் வேண்டுதல்.

**பதினான்குசீர்க் கழிநெடிலடி.**

தழைத்தெழும் கிரணப் பணிநிலா மதியமும்
தழங்கழற் பருதிஎன் றெறிக்கும்
தமிழுடன் பிறந்த மந்தமா ருதமும்
தழற்குழம் பெடுத்தெடுத் திறைக்கும்
குழைத்தகுங் குமச்செங் களப லேபனமும்
கொதித்துயிர் குடிக்கும்என் னளவில்
கொடுவினை விளைந்த காலம்நல் லனவும்
கொடியவாம் என்பதின் றறிந்தேன்
கழைக்குலம் கடிந்து சந்தனம் திமிர்ந்து
காழகிற் குழாம்முறித் ததிர்ந்து
கரிமுக மருப்பும் கவரியும் சுமந்து
கனகமும் தாளமும் கொழித்து
மழைக்குலம் பிளிறும் நெடுஞ்சுரம் கடந்து
வணிகர்போல் கடைநிலம் புரக்க
வரும்பெரும் பொருனைத் துறைவனே! குவளை
வளைவயற் பேரைமா தவனே! (5)

கிரணப் பணிநிலா மதியம் - பதினாறு கலைகளோடு எழுந்த தண்ணிய நிறைமதி. பருதி என்று எறிக்கும் - சூரியனைப் போலக் காயும். தழற்குழம்பு - அக்கினித் திராவகம். எடுத்து எடுத்து என்னும் அடுக்கு மொழியினால் ஊற்றிக்கொண்டேயிருக்கும் என்ற படி. களப லேபனம் - சந்தனப் பூச்சு. கழைக்குலம் - மூங்கிற்காடு. காழ்அகிற் - வயிரம் பாய்ந்த அகரு. கரிமுக மருப்பு - ஆனைக் கொம்பு. கவரி - சாமரம். கனகம் - பொன். தாளம் - முத்து. மழைக்குலம் - மேகம் போன்ற யானைகள். பிளிறும் - வெயிற் கொடுமை தாங்காமல் ஓலமிடும். நெடும் சுரம் - பாலை நிலம். வணிகர் போல் - வியாபாரிகளைப் போல. கடை நிலம் - நெய்தல் நிலம். பொருனைத் துறைவனே! என்ற விளியால் எனது வெப் பத்தை நீயே தவிர்க்க வேண்டும் என்பது குறிப்பு.

## எழுசீர் வண்ண விருத்தம்.

தவசரியை கிரியைஅவை தவிரஇகழ் கொலைகளவு
　　தனைநினையும் அறிவி லியைமா
கவலைபடு சகடுபடு பகடனைய பகடனையுன்
　　கழலிணையில் அடிமை கொளுவாய்
நவமணியும் மலர்மகளும் இளமதியும் மதகளிறும்
　　நறைகமழும் அமிழ்தும் எழவே
திவலைஎறி கடல்கடையும் நிகரில்முகில் வண!அமரர்
　　தெளியும்அரு மறைமு டியனே ! (6)

சரியை - ஞானம். கிரியை - கர்மம். மாகவலை - மிக்க கவலை. சகடுபடு பகடு - வண்டிக் காளை. பகடன் - வெளி வேடக்காரன். உன் கழலிணையில் அடிமை கொளுவாய் - மறந்தும் புறந்தொழா மல் உன் திருவடிகளுக்கே. கைங்கரியம் செய்யும்படி அருள்வாயாக. நவமணி - ஒன்பது வகைப்பட்ட ரத்தினங்களும். மலர்மகள் - திரு மகள். இளமதி - சந்திரன். மதகளிறு-ஐராவதம். மறை முடியனே!- உபநிடதங்களின் உட்பொருளானவனே !

## கையுறை மறுத்தல்.

### பதினான்கு சீர்ச் சந்தத் தாழிசை.

மறைமு டித்தலையில் உறமி தித்தபதம்
　　மருதி டைத்தவழும் மாயனார்
வழுதி நாடர்மக ரக்கு ழைக்கடவுள்
　　மழைகொ ழித்தொழுகி அருவியாய்

நிறைமு டித்தலையில் அருவி குப்புறநி
　　லாஉதித் தொழுகும் வெற்பனே!
நீஅ ளித்தஇது வேயின் முத்தம்என
　　நிச்ச யப்படமொ ழிந்ததேன்?

பிறைமு டித்தலைநீர் சிதர விட்டதொரு
　　பின்னல் பட்டசடை இல்லைவாம்
பிணைஎ டுத்ததலை திரிபு ரத்தைஅழல்
　　பிழிய விட்டநகை இல்லைவாய்

கறைமு டித்தமிட றில்லை முக்கணொடு
காக பாலமிலை எங்கண்மால்
கழலிணைத் தொழும றந்த தால்எமவர்
கைதொடக் கடவ தாகுமோ? (7)

நிறை முடித்தலையில் - நிறைந்த குடுமியுள்ள தலையில். நிலா - நிலவு; பிறைச் சந்திரன். வெற்பனே! - குறிஞ்சி நிலத் தலைவனே! வேயின் முத்தம் - வேய்தந்த முத்து; வேணுவன லிங்கம்; சிவன். ஏன்? - ஏனோ? நீர் வடியவிட்ட சடை - கங்கைவார் சடை. வாம்பிணை - தாவுகின்ற பெண்மான். வாய் அழல் பிழிய விட்ட நகை இல்லை என்று கூட்டுக. கறைமிடறு - நீலகண்டம். முக்கண் - மூன்று கண்கள். கரகபாலம் - தலை ஓடு ஏந்திய கை. மால்கழல் - திருமால் திருவடி. எமவர் - எம்மவர்; ஸ்ரீ வைஷ்ண வர். கை தொடக்கடவது ஆகுமோ? - கை தீண்டத் தகாது. தொடக்கடவது ஆகுமோ? என்றதனால் இழிவு தோன்ற வைத்தமை காண்க,

(கொளு)

தலைவனைப் பிரிந்த தலைவி குயில் கூவற்கும்
அலைகடல் ஒலிக்கும் அகம் உளைந்து புலம்பல்.

**எழுசீர்க் கழிநெடிலடி விருத்தம்.**

ஆகம் ஒன்றிரண்டு கூறுகண்டு பண்டை
ஆட கன்றன்அங்கம் அடுபோர்
வாகை வென்றிகொண்டு பேரைவந்த கொண்டல்
மாய வன்துயின்ற கடலே!
பாகை யும்பிழிந்து தேனையும் கவர்ந்து
பாலு டன்கலந்த மொழிசேர்
கோகி லங்கள் இனறென்ஆவி மென்றுதின்று
கூவு கின்றுன்கூவல் குறையோ? (8)

ஆகம் - உடல். கூறு - பிளவு. ஆடகன் - இரணியன். வாகை வென்றி கொண்டு - வெற்றி (ஜய) மாலையாக சூடர்மாலை சூடிக்கொண்டு. கோகிலங்கள் - குயில்கள். உன் கூவல் குறையோ- உன் முழக்கம் வேண்டுமோ?

## கட்டளைக் கலித்துறை.

குறைக்கொழுந் தாயமிழ் தின்கொழுந் தாரைகொழிக் கும்அந்தி
பிறைக்கொழுந் தார்மதிட் பேரைப்பி ரான்தம்பி பின்னாகவும்
முறைக்கொழுந் தா!என்று முன்மொழி சீதை முலைமுயங்கும்
மறைக்கொழுந் தாய்அன்று கைம்மாறு செய்தனன் வானவர்க்கே.

(9)

பேரெயில் என்பது தோன்ற அந்திப் பிறைக் கொழுந்து ஆர் பதில் என்றார். பேரைப்பிரான் - தென்திருப்பேரையில் வீற்றிருந்தருளும் வானப்பிரான் (திருவாய் 7-3-2) தம்பி பின்னாகவும் - இலக்குவன் (லக்ஷ்மணன்) பின்னாலே நின்று கொண்டிருக்கவும். முறை - உறவு (பந்து) முறையில். கொழுந்தா! என்று - என் நாயகனே என்று. 'முன்மொழி சீதை முலைமுயங்கும்' இதற்கு, ''தம் த்ருஷ்ட்வா சத்ரு ஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே.'' (வால்மீகம்) என்பதிலும் ''படாமுலைப் பூமடமான் தழுவும் கருங்கடலே!'' (பாமாலையந்தாதி 56) என்பதிலும் நோக்கு. தம்பி பின் நிற்கவும் தழுவல் தகுமோ? எனின் அணையாக இருந்து உதவும் ஆதிசேஷன் ஆதலின் பொருந்தும்.

## அறுசீர் வண்ண விருத்தம்.

வானவர் தானவர் மாமனு சாதிகள் வாழ்வதும் தாழ்வதும்மேல்
வானுல காள்வதும் கீழ்நர கீழ்வதும் மாயையி னாலலவோ?
ஏனமீ னும்அரி வாமன னாகிஇ ராமர்கள் ஆனபின்ஓர்
ஞானவ ரோதயன் ஆனந ராதிபன் நாரணன் காரணனே. (10)

தானவர் - அசுரர். நரகுஈழ்வதும் - நரகத்தில் இழித்து ஆழ்வதும். வாமனன் - குறளன். இராமர்கள் - பரசுராமன், கோதண்டராமன், பலராமன் என மூவரும். ஓர் ஞான வரோதயன்- ஒப்பற்ற ஞான தேசிகனான பராங்குசன். நராதிபன்-புருஷோத்தமன். காரணன்-ஆதிமூலம்; ''உந்திக் கமல முதற் கிழங்கு'' இச் செய்யுளின் பிற்பகுதியில் திருமாலின் அவதாரங்கள் பல அமைந்திருப்பது காண்க.

(கொளு)

**மெல்லியற் றலைவியின் வேறுபாடு கண்டுமுன்**
**எள்ளிய செவிலிபின் இரங்கிக் கூறுதல்.**

## அறுசீர்த் தாழிசை.

கார ணங்குறி யாய்வ ழங்கிவள் காதல் மங்கையளே
வார ணந்தனில் வீதி வந்தவன் மாலை தந்திலனே
நார ணன்செக பூரணன்திரு ஞான சிந்தனை யான்
ஆர ணன்புகழ் பேரை யம்புயல் ஆழி யம்புயனே. (11)

முதலடிக்கு பதின்மூன்று வயது இளம்பெண்ணாயினும், இவள் காதல் கொண்டமையின், இதுவே காரணமாகக் காதல் மங்கை என்பது உண்மைதான் என்பது பொருள். வாரணம் - களிற்று யானை. வீதி வந்தவன் - உலா வந்தவன். மாலை-அவனது துளசி மாலையை. திருஞான சிந்தனையான்-நம்மாழ்வார். ஆரணன்-பிரமன். இவர் புகழ் பேரை அம்புயல் - தென்மொழித் தமிழ் மறையாலும், வடமொழி வேதத்தாலும் நம்மாழ்வாரும், பிரமனும் துதிக்கின்ற நிகரில் முகில் வண்ணன். "கருமாணிக்கம் இன்தமிழ் ஆரணத்தில் போதவன் ஏகம் எனவே பரவிப் புகழ்ந்த குழைக்காதா!" (பாமாலையந்தாதி 78) ஒப்புக் காண்க. "நகரி முத்தமிழ் ஞானர் பரவிடும் வயற்பேரை" (95) என்றும். "ஞான புங்கவர் பரவும் பேரையம்பதி முதல்வ!" (97) என்றும் வருவது காண்க.

(கொளு)

தலைவன் தோள்அணிந்த தார்பெருத் தலைவி
நலம்செய் தோழியரோ டன்னையரை நோதல்.

## எண்சீர்த் தாழிசை.

ஆழி மாயவன் பேரை மாலளந்
 தவனி யுண்டவன் பவனி கண்டபின்
தோழி மாரவன் துளப மாலைஎன்
 துணைமு லைக்கிடார் குழல்மு டிக்கிலார்
ஊழி வேர்விழும் கங்குல் நட்டதும்
 உடுப திக்குவேம் அழல்கொ டுத்ததும்
கோழி வாயையும் கூடுவொண் ணுமல்மண்
 கூடு கொண்டதும் கொடியர் தாயரே. (12)

ஆழி மாயவன்-பாற்கடற் பரமன்; "வெள்ளைச் சுரிசங்கோடு ஆழி ஏந்தி" (திருவாய் 7-3-1) எனினுமாம். அளந்து - திரிவிக்கிரமனாகி அவனி அளந்து. பவனி - ஊர்வலம். குழல் - கூந்தல்.

ஊழி - (பிரமனின் ஆயுட்காலம்) யுக முடிவு. உடுபதிக்கும் - தாரா பதியான தண்மதிக்கும். வேம்அழல் - வேகச் செய்யும் தீ. மண் கூடு - மண் அடை நல். கொடியர் - மனக்கொடுமை யுள்ளோர். தோழியர் அயலார் வீட்டுப் பெண்களாதலின் அவர், மாலையிடாமலும் குழல் முடிக்காமலும் இருக்கட்டும்; பெற்றவரும் வளர்த்தவரும் சும்மா இருக்கலாமா? என்கிருள். இச் செய்யுளுக்கு ''கோழியும் கூகின்றிலே கூரிருளாயிற்றே'' (பெரியதிரு 11-2-6) என்பதில் நோக்கு.

(கொளு)

காதல் கொண்டு கண்ணிக் கிரக்கும்
பேதையின் அன்னை பெருமானை வேண்டுதல்.

### வெண்பா.

ஏடவிழும் கண்ணிக் கிரப்பாள் இவள்கலைநாண்
கூடவிழும் கண்ணீர் குறையாயோ? - மாடமதில்
வீதிமக ரக்குழையும் வெண்மதியும் தோய்பேரை
நீதிமக ரக்குழைய னே ! (13)

ஏடு - புறவிதழ். கண்ணி - திருமுடியிற் சூடும் திருத்துழாய்க் கண்ணி. கலை - ஆடை. நாண்-வெட்கம். கூட விழும்-இவற்ருேடு கூட விழுந்து கொண்டேயிருக்கின்ற. கண்ணீர் குறையாதோ? என்ற தொனியால் குறைத்தருள வேண்டுமென்று வேண்டுகிருள். மாடம் - தெருக்களிலுள்ள உப்பரிகை. மகரக்குழை - மகர ராசி நட்சத்திரம். மதில் - கோயில் திருமதில். பேரெயில் என்பது தோன்ற மகர ராசியும் மதியும் தோய்வதாக உயர்வு நவிர்ச்சி வந்தமை காண்க. செய்யுளின் முற்பகுதிக்கு கண்ணி பெருத காரணத்தால் ஆடையும் நாணமும் நழுவி விழ்தலோடு கண்ணீர் பெருகி ஓடுகிறது என்பது பொருள். நீதி மகரக் குழையனே ! என்பதனோடு "கோடாத பேரைக் குழைக்காதா!'' என்பதனை ஒப்பு நோக்குக. கண்ணீர் குறையாயோ? என்பதில் அழுகை தோன்ற வைத்தமை காண்க.

(கொளு)

கூடிப் பிரிந்த கொழுநன் வரவறிதற்குக்
கூடல் இழைத்த குவிமுலை குமுறுதல்.

## கட்டளைக் கலித்துறை.

குழைத்திருப் பாரமிழ் தம்கனி வாயிற் குரல்பிடிக்கும்
கழைத்திருப் பாலிசை கண்டருள் வார்குழைக்கா தர்நன்னுட்
டிழைத்திருப் பார்மணற் கூடலென் றுலும் இறப்பதன்றிப்
பிழைத்திருப் பாருமுண் டோ?இவர் சூழ்பொய்த்த பின்னையுமே.

(14)

கனிவாயில் - செங்கனிவாயில், அமிழ்தம் குழைத்திருப்பார் என்று கூட்டுக. ''கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ? திருப் பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?'' (நாச்சியார் திரு மொழி) ஒப்புக் காண்க. குரல் பிடிக்கும் கழை - இனிய ஓசை தரும் புல்லாங்குழல். திருப்பால் இசை கண்டருள்வார் - குழலை அசைத்த லாலேயே இசையை - சங்கீதத்தைத் தாமும் அனுபவித்துப் பிற ரும் பிறவும் அனுபவிக்கச் செய்யும் கண்ணன் என்றபடி. மணற் கூடல் இழைத்திருப்பார் - நாயகனைப் பிரிந்த பெண்கள் அவன் வருகையை எண்ணிக் குறிக்காண கண்மூடிக்கொண்டு தம் விரலால் மணலில்ச் சுழித்து வட்டம் கூடுதலை ஒற்றையா? இரட்டையா? என்று பார்த்திருப்பார். ஆயினும் பிரியேன் என்று ஆணையிட்டுச் சொன்ன இவர் வார்த்தை பிழைத்துப் போன பின்பு உயிர் தரித்து இருப்பரும் உண்டோ? என்கிருள் கடைசியடியில். மனத்தை விட்டு நீங்காமையின் அவர் என்ருது இவர் என்கிருள்.

(கொளு)

களவுப் புணர்ச்சியிற் காதலன் அளித்ததை
உளவறி தோழிக்குத் தலைவி தனி உணர்த்துதல்.

## பதினன்கு சீர்த் தாழிசை.

பின்னை யைத்தழு விப்பு ணர்ந்தெழில்
பெற்ற செங்கனி வாயனுர்
பெருகு முத்தமிழ் மறைகொ ழித்தறி
பேரை யம்பதி அன்னமே!
முன்ன டித்தெரி யாதி ருண்டுமு
கிழ்ந்து கண்புதை கங்குல்வாய்
முளரி யம்பதம் நோவ நம்பதம்
மூத றிந்தவர் போல்வர

அன்னை யடிப்படி மலர ணைக்குள்அ
ணைத்த கையைநெ கிழ்த்துவே
றடைகொ டுத்துக பாடம் நீக்கிஅ
டிச்சி லம்பொலிஎ ழாதுசெல்
என்னை இப்படி இகழ வைத்தசிற்
றின்பொ ழுக்கநல் வாழ்வைமற்
றியான்ம றைக்கினும் சூன்ம றைக்கு
றிப்பி றப்பினில் இல்லையே. (15)

பின்னை - நப்பின்னைப் பிராட்டி. எழில்பெற்ற செங்கனி வாயனார் - கொவ்வைக் கனியின் அழகைக்கொண்டு சிவந்த உதடுகளையுடைய மகர பூஷணப் பெருமாள். தமிழ் மறை கொழித்து அறி - திவ்யப் பிரபந்தத்தில் அகப் பொருள்த் துறைகளையுடைய திருவிருத்தத்தை நன்கு அறிந்த. அன்னமே - நீரை ஒதுக்கிப் பாலையே பருகுவதும், நன்னடையதுமான அன்னப் பறவை போன்று, குற்றம் நீக்கிக் குணமே கொள்ளும் இயல்பும் நல்லொழுக்கமும் உள்ள உயிர்த்தோழீ! என்றபடி. கங்குல்வாய் - நடுநிசியில். அம்பதம் நோவ - திருமகள் கரம் தொடச் சிவந்து காட்டும் மெல்லிய திருவடிகள் கன்றும்படி. நம்பதம் - ஊர், தெரு, வீடு முதலியன. மூதறிந்தவர் போல் வர - பண்டே பழகினவர் போல மனத்துணிச்சலோடு வந்து. அன்னை அப்படி அணைத்த கையை நெகிழ்த்து - தாயார் மிகவும் கவனத்தோடு கட்டி அணைத்த கையை மெதுவாக உயர்த்தி. வேறு அடை கொடுத்து-எனக்குப் பதிலாகத் தலையணையைச் சாரவைத்து. கபாடம் நீக்கி - கதவின் தாள் நீக்கித் திறந்து. அடிச் சிலம்பு ஒலி எழாது செல் - காலின் சிலம்பு ஓசைப் படாமல் சென்ற. இப்படி இந்நிலத்திலுள்ளோர். இகழ - அலர் தூவ. சூல் - கருப்பம். மற்று - வினை மாற்று.

இரண்டாவது அடியில், தலைவன் செயலும் மூன்ருவது அடியில் தலைவி செயலுமாகக் கொள்க.

செங்கனி வாயர் நம்பதம் வர, அடிச் சிலம்பொலி எழாது செல் என்னை இப்படியோர் இகழ வைத்த சிற்றின்ப என் களவொழுக்க வாழ்வை யான் மறைக்கினும், சூன் மறைக்குமாறு இல்லையே என்கிருன் உயிர்த் தோழியிடம்,

''பால்வடியும் திரள்முலையும் பச்சுடம்பும் பசுநரம்பும்
நூல்வடிவும் தோன்றாமல்'' (46) மறைப்பது எங்ஙனம்
என்றாள்.

### எண் சீர்த் தாழிசை.

ஏது காரணத் தெவர்க ளேனுமற்
றிழிகு லத்தெழும் புலைய ரேனும்உட்
சாதி பேதமற் றவர்தம் மிச்சிலைத்
தருவ ரேல்அது புனித வாழ்வதுதான்
ஆத லால்அருட் பேரை நாரணற்
கடிமை யானஉத் தமர்ச ரோருக
பாத தூளிபட் டுலகம் வாழ்தலின்
பரவு வார்பதம் அளவி லாததே. (16)

ஏது காரணத்து எவர்களேனும் - பஞ்சமா பாதகங்களைச் செய்துளோராயினும், மற்று - வினைமாற்றுப் பொருளில் வந்தது. புலையரேனும் - இழிதொழில் செய்பவராயினும். உட்சாதிபேதம் அற்றவர் - ''பண்டே உயிரனைத்தும் பங்கயத்தாள் நாயகர்க்கே தொண்டாம்.'' (ஞான சாரம் 13) என்பதனையறிந்து வருணபேத மின்றி அடியார் என்பதனையே எண்ணி இருப்பவர். மிச்சிலை - உண்டு கழித்த மீதியை (சேடத்தை) உத்தமர் - குணத்தால் சிறந்தவர். சரோருகபாத தூளி - பாத பத்ம தூசி. பரவுவார் பதம் - ஸ்ரீ வைஷ்ணவரை ஆராதிப்பவரின் வாழ்வு.

(கொளு)

பிள்ளைப் பருவப் பேதை மயல் ஆழ்வதைத்
தள்ளை பிறர்க் குரைத்துத் தன்னுளம் மாழ்குதல்.

### இன்னிசைக் கலிப்பா.

அளவறியாப் புனலிடைப்பட் டழுந்துநர்போல் அணியிழையீர்!
விளவறியாப் பேதைமயல் வெள்ளத்தில் வீழ்குவளே
களவறியாத் ததிநுகர்செய் கனிவாயர் மணிப்புயத்தில்
துளவறியாப் பின்னையொன்றும் சொலவறிய மாட்டாளே. (17)

அளவறியாப் புனல்-ஆழம் இவ்வளவு என்று அறியப்படாத வெள்ளத்தில். அழுந்துநர் - தத்தளிப்பவர். விளவு அறியாப்பேதை- விளைவு. பெண் தன்மையை அறியும் பக்குவம் ஆகாத சிறுமி.

மயல் வெள்ளம்-''காதல் கடலின் மிகப்பெரிதால்'' (திருவாய் 7-3) என்னும் படியுள்ள பெருங்காமம். களவு அறியா ததிநுகர் செங்கனி வாயர் - களவு நூல் நன்கு அறிந்தும் அறியாதார் போல் ''தயிருண்ட வாய் துடைத்த மைந்தன்'' ( பெரியதிரு 8-5-5 ) என்னும்படி திருடியுண்ட செங்கனிவாயர். துளவு - துளசி. பின்னை ஒன்றும் சொல அறிய மாட்டாளே - பேதைப் பருவமாதலின் வேறு ஒன்றும் சொல அறியமாட்டாள் என்கிருள்.

(கொளு)

மடல் ஊர்தல் அன்றி வழிபிறி தில்லெனத்
தடமுலை துணிதலைத் தாய் பிறர்க்குரைத்தல்.

## அறுசீர்க்கழி நெடிலடி

ஆளைப் பொருது கயம்கலக்கி அடியிற் படிந்து மதகிடிய
வாளைப் பகடு புகுந்துழக்கும் வயல்சூழ் வழுதித் திருநாடன்
தாளைத் தொழுது பசுந்துளவச் சருகுக் கிரந்து மடவால்மால்
தோளைக் கருதி மடலூரத் துணிவாள் விரகுஒன் றறியாளே.

(18)

வாளைப் பகடு - பெரிய வாளைமீன். அடியிற் படிந்து கயம் கலக்கி மதகு இடியப் புகுந்து ஆளைப் பொருது உழக்கும் வயல் என வழுதி நாட்டின் நீர் வளம் நில வளங்களை முன்னிரு அடிகளிற் கூறிய நயம் காண்க. பின்னிரண்டு அடிகளில் தலைவனின் தார் பெற, வேறு உபாய மின்மையின் தலைவி மடலூரத் துணிவதாகத் தாய் பிறர்க்கு உரைக்கிருள். ''அன்ன நடையார் அலர்ஏச ஆடவர் மேல் மன்னும் மடலூரார் என்பது ஓர் வாசகமும் தென்னனுரையிற் கேட்டறிவ தொன்றுண்டு மன்னும் வடநெறியே வேண்டினேம்.'' என்ற பெரிய திருமடல் காண்க.

## அறுசீர் வண்ணத் தாழிசை.

அறிவி லேன்ஒரு சமய நீதியின் அடைவி லேதிரிவேன்
நெறிநி லேன்உறு கதியி லேன்உனை நினையும் ஆறுளதோ?
இறைவ னே! மறை முதல்வ னே!தொழும் எமது நாயகமே!
மறுவி லேம்மரபு தழையும் பேரெயில் மருவி வாழ்முகிலே!

(19)

தொழும் எமது நாயகமே! - ''நூற்றெண்மர் தொழும் சுடர்'' ( பாமாலை யந்தாதி 4 ) விரைதுளபச் செழும் புயலைத்

தொழும் நூற்றெட்டு வேதியர்தம் புகழ்பாடி ஆடிர் ஊஞ்சல் (20)''உத்தம குலத்தினில் உதித்த எழில் நூற்றெண்மர் பத்தியொடு ஏத்தவரும் பெருமாள்.'' (கட்டியக்கவி) இவை ஒப்பு நோக்குக. ஆறு - வழி, உபாயம். ''அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்'' என்றபடி, நான் உன்னை நினையாவிடினும், அழையாவிடினும், நீ நின் நிர்ஹேதுக கிருபையினாலே வந்து காக்கவேண்டும் என்பது குறிப்பு. பேரெயில் மருவி வாழ் எமது நாயகமே! முகிலே! என்று கூட்டுக.

## ஊஞ்சல்

### பதினாறு சீர்க் கழிநெடிலடி

வாழிவலம் புரிந்துநெடுங் குழைக ளாட
மலர்க் காந்தட் செங்கைவரி வளைகளாட
வனமுலையிற் கிடந்துமுத்து வடங்க ளாட
மழைகவிந்த குழலவிழ்ந்து மருங்கி லாட
சுழிவலம் புரிகழிற்று மைந்த ரோடச்
சுரமுனிவர் உளமனைத்தும் சூறை யாட
சுடர்வயிர வடம்பிணைத்துக் கமுகின் ஏற்றி
துலங்குமணிப் பொன்னூஞ்சல் தொடங்கி யாட
மேழிவலம் புரிபழனப் பேரை நாட்டின்
மேதகுசீர் வளம்பாடி ஆடிர் ஊஞ்சல்
விரைதுளபச் செழும்புயலைத் தொழும்நூற் றெட்டு
வேதியர்தம் சீர்பாடி ஆடிர் ஊஞ்சல்
ஆழிவலம் புரிபாடி ஆடிர் ஊஞ்சல்
அழைகலுழக் கொடிபாடி ஆடிர் ஊஞ்சல்
ஆழ்வார்தம் தமிழ்பாடி ஆடிர் ஊஞ்சல்
அமிழ்தனையீர்! அணியிழையீர்! ஆடிர் ஊஞ்சல்.

(20)

நெடுங் குழைகள் - நீண்டு தொங்கும் குண்டலங்கள். வலம் புரிந்து ஆட - வலம் சுற்றி (பிரதக்ஷிணமாக) அசைந்து ஆடும்படி. காந்தள் மலர்ச் செங்கை வரிவளைகள் அசைந்து ஆடும்படி, அழகிய தனங்களில் கிடந்து முத்துமாலைகள் அசைந்து ஆடும்படி, அமிழ்தனையீர்! அணியிழையீர்! நீங்கள் சீர்பாடி ஆடுங்கள் என்கிறார்.

சீர்பாடுதல் என்பது ஸ்ரீ வைஷ்ணவர் தம் திருமணத்தில் ''வாரண மாயிரம்'' (நாச்சியார் திருமொழி) பாடி, நாச்சியார் சம்பாவனையோடு சீர்பாடி நடத்தி வரும் ஒரு புனிதச் செயல்

மகளிர் இங்ஙனம் பாடி ஆடும்பொழுது இளைஞர் காண்பா ராயின் அவர் உள்ளத்தையும், சுரமுனிவர்தம் உள்ளத்தையும் கொள்ளை கொள்ளுமாம் இளம் பெண்களின் எழில் நலம்.

பாடுவோர் திருவழுதி வளநாட்டின் சீரையும், நூற் றெண்மரின் சீரையும், சங்கு சக்கரங்களின் சீரையும், (எல்லோரை யும் சேவிக்க அழைப்பது போன்று அசையும்) கருடக் கொடியின் சீரையும் பாடுதலோடு பிரபந்தங்களையும் பாடி ஆடுகின்றாராம்.

மூன்றாமடியில் 'மேழிவலம் புரி பழனப் பேரை' என்றதற்கு ''ஏர்வலம் வருகழனிப் பழனத் தென்திருப்பேரெயில் மாநகரதுவே'' (திருவாய்மொழி 7-3-9) என்பதில் நோக்கு.

(கொளு)

பெம்மான் பவனி கண்டபின் பேதை
சும்மா அவன்புகழ் பாடுதலைத் தாய்சொல்லல்.

## அறுசீர் வண்ணத் தாழிசை.

ஆடி லாள்கழல் ஆடி லாள்சுனை ஆடி லாள்பனிநீர்
போடி லாள்படாம் தேடி லாள்வளை பூணி லாளிவள்தான்
பீடு லாவிய வீடு நீடிய பேரை வாழ்முகிலே!
நாடு வாளிசை பாடு வாள்நமோ நார ணாஎனவே. (21)

கழற்சிக்காய் ஆடுகின்றாளில்லை. சுனை நீரில் நீந்தி விளையாடுகிறாளில்லை. குளிர் நீரில் குடைந்தாடுகின்றிலாள். மேலாடை (தாவணி) போட மறந்துவிடுகின்றாள். நழுவி வீழ்ந்த வளைகளையும் தேடுகிறாளில்லை. எப்பொழுதும் ''நாடும் நகரமும் பிறவும் தேர்வேன்'' என்றபடி பெருமானையே தேடி அவன் புகழே பாடுகின்றாள் என்றபடி.

## எழுசீர்ச் சந்தத் தாழிசை.

நாராய ணாயநம ஓதாமல் வீண்மொழிசொல்
நாவாலும் ஏதுபயன்? அவர்புகழே
ஆரானும் ஓதிலவை கேளாமல் ஆடுசெவி
ஆனாலும் யாதுபயன்? அறிவிலிகாள்

காரான சோதியழ காராத காதலொடு
காணார்கண் ணுலுமொரு பயனுளதோ?
வாராழி மீதுதுயில் பேரேசர் கோயில்வலம்
வாராத காலும்ஒரு பயனிலவே. (22)

மூன்றாமடிக்கு "சென்று சேர்வார்க்கு உசாத்துணையறுக்கும் ஸௌந்தர்யம் மாநகரிலே கோஷிக்கும்" (ஆசார்ய ஹ்ருதயம் 170) என்பதில் நோக்கு. நா, செவி, கண், கால் முதலிய உறுப்புக்களை எம்பெருமான் விஷயத்திலே ஈடுபடுத்த வேண்டுமென்கிறார்

(கொளு)

தலைவியின் ஊடல் உணர்த்தத் தலைவன்
மலர் கொய்யும் சோலையில் தோழியை வேண்டுதல்.

**பதினசீர்ச் சந்தத் தாழிசை.**

ஒருபிழை கண்டயர்ப் பாருள் ளாதர வில்லாதாஅர்
உறவுநி னைந்திருப் பாருறு கோபம்கு மையாஅதார்
இருவரும் இங்கிதத் தோடே கூடிபி ணையாஅநாள்
இளமைந லங்கிடைத் தாலும் ஏதுப யன்ஆஅமோ?

முருகவிழ் செங்கனிக் கோவை இதழ்வழி மொழியாஅலே
முனியின்பெ ருங்குடிக் கேதமு றுவது முணராஅரோ?
மருவிய சந்தனக் காவின் நறுமலர் கொய்வாஅரே!
மகரநெ டுங்குழைக் காதர்இன் பேரை யனையாஅரே!

(23)

முற்கோபம் இல்லாதவர், 'குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை' என்பதனையறிந்து, பெரும் பிழையையும் பொறுத்து உறவையே நினைத்திருப்பர் என்றும், உள்ளன்பு இல்லாதவரே ஒரு சிறு குற்றம் கண்டாலும் அதனைப் பெரிதாக்கிக் கொண்டு வெறுப்பர் என்றும், முதலடியின் பொருள். இரண்டாமடிக்கு காதல் இருவர் கலந்து பழகாமல் வீணே இளமை கழியுமாயின் யாது பயன்? சென்ற இளமை மீண்டு வருமா? என்பது கருத்து. மூன்றா மடிக்கு அமிழ்தம் வழியும் இதழ்கள் வழிகோபச் சொல் வருமாயின் அது குடிப்பெருமைக்கு ஏற்குமா? என்பது பொருள். ஆதலின், இன்பமயமாகும் பேரைமா நகரம் போன்றவர்களே! அநுகூலமான பதில் தெரிவிக்க வேண்டும் என்று வேண்டுகிறான். இங்கிதம் - குறிப்பறிதல். இணைதல் - சேர்தல்.

(கொளு)

தலைவன் தன் ஆற்றாமையைத் தலைவியிடம் சாற்றுதல்

**கட்டளைக் கலித்துறை.**

ஆரைய ராம லிருப்பார் அவருக் கருள்புரியும்
பேரைய ராதிபர் எம்குழைக் காதர் பொருப்பில்மின்னே!
தாரைய ராவிக் கடைந்தசெவ் வேல்எனத் தாழ்ந்தகுழல்
காரைய ராவிஎம் நெஞ்சும் அராவும் கயற்கண்களே. (24)

அயராமலிருப்பார் யார்? அவருக்கு அருள் புரியும் பேரைய ராதிபர் எம் குழைக்காதர் என்று கூட்டுக. பொருப்பு - அவர்தம் வராக கிரி. (பன்றி மலை) மின்னே! - மின்னற் கொடி போன்று துவளுகின்ற பெண்ணே!. தார் - வாள் முறி. செவ்வேல் - குருதி படிந்த வேலாயுதம். தாழ்ந்த குழல் கார் - நீண்டு தொங்குகின்ற மேகம் போன்ற கூந்தல். கல்வியறிவாற் சிறந்த எமது நெஞ்சை யும் நும் கண்கள் அராவுகின்றன என்கிறான் தலைவன். நீ கருணை செய்ய வேண்டும் என்பது குறிப்பு. கயல் கண்கள் - கயல் போன்று பிறழ்கின்ற நும் கண்கள் என்றபடி.

(கொளு)

நீளிரவின் கொடுமையை நினைந்து
தலைவி இரங்குதல்.

**பதினொன்று சீர்க் கழிநெடிலடி.**

கண்ணகம் புதைப்ப வெளியிடம் கவரக்
கரும்படாத் திருட்படாம் விரித்துக்
கடல்விடக் குழம்பை அள்ளியிட் டுலகம்
கரந்துகொள் ளுவம்எனத் துணிந்து

விண்ணகம் புதைத்த பருதியை மதியை
விழுங்கியுண் டொருபுடை செரிப்ப
வேர்விழுந் தூழி முடிவிலாக் கங்குல்
வெடிவிலாத் தன்மைஏ துரையாய்

மண்ணகம் புதைத்த மலரடி முனிவர்
மனத்தகம் புதைப்ப ஏழ்புவியும்
வயிற்றகம் புதைத்த பெரும!அன் றிடைச்சி
மார்க்கமும் புதைப்பநீ வெருவிப்

பண்ணகம் புதைத்த பவளவாய் புதைத்து
பருமணிக் குழைபிடித் தாடப்
படித்தவா! சுருதி முடித்தவா! பேரைப்
பதிவளம் புரக்கும்மா முகிலே ! (25)

பேரைப்பதி வளம் புரக்கும் முகிலே! கங்குல் வெடிவு இல்லாத் தன்மை ஏது? உரையாய் எனக் கூட்டுக. வெளியிடம் கவர - தான் ஆகாயத்தையுங் கவர்ந்து கொள்ளும்படி, கரும்படாத்து இரும்படாம் - கருங்கம்பளி போர்த்திறற் போன்றுள்ள இருட் போர்வை. விடத்தின் நிறம் நீலமாதலின், ''கடல் விடக் குழம்பை அள்ளியிட்டு என்றார். பருதியை - சூரியனை. மதியை - சந்திரனை இவ்விருவர்களையும் விழுங்கி ஜீரணிக்கச் செய்து விட்டது நீளிரவு என்கிறார். வேர் விழுந்து - ஆணி வேர் ஊன்றி. மண்ணகம் - பூமி முழுவதும். முனிவர் மனத்தகம் மலரடியைப் புதைப்ப என்க. (யோகி ஹ்ருத்யான கம்யம் என்னும்படி) ஏழ் புவியும் வயிற்றகம் புதைத்த பெரும! - மேல் ஏழு உலகங்களும் கீழ் ஏழு உலகங்களும் உண்டும் வயிற்றுக்கு ஆராதபடி உண்ட பெருமானே! இடைச்சி - ஆய்ச்சி அசோதை. மார்க்கம் - வழி. வெருவி - பயந்து. பண் - இசை. பருமணிக் குழை - மணி மகர குண்டலங்கள். ஆடப்படித்தவ! - தோற்புக்கரணம் ஆடப்படித்தவனே!. சுருதி முடி - உபநிஷத்துக்கள். இச்செய்யுளில் எட்டுப் புதையல் வைத்துப் பாடிய நயம் காண்க.

(கொளு)

அயல்விழித் தலைவி அன்னை வளர்த்த மாவில்
குயிலிருந்து கூவலின் உட்கொதித்துக் கூறுதல்.

### வெண்பா

மாவளர்த்த அன்னை மதுவனமும் தான்வளர்க்கக்
காவளர்த்தா ரன்றுகுழைக் காதரே! - நாவளர்த்துச்
செற்றார் நகைவெடிப்பத் தீவெடிப்பப் பூந்துளவின்
முற்றா முகைவெடிக்கு மோ ? (26)

மா - மாமரம். மதுவனம்-குயில்; (சிங்காரத் தோப்பு எனினுமாம்) வசந்த காலத்தில் மாமரம் பூக்கும்; இது விரக ஹேதுவாகும் என்பர். கா - தேமாஞ் சோலை. நாவளர்த்து - நாக்கு நீட்டி அலர்

தூற்றி. செற்றார் நகை வெடிப்ப - 'தண்ணுதார் முறுவலிப்ப' என்றபடி கேலி செய்தல் நீங்க. பூந்துளவின் முகை - கிருஷ்ண துளசியின் மொட்டு. வெடிக்குமோ? - மணக்குமோ?

(கொளு)

பதியொடு சுரம்செல் பாவை காற் கிரங்கி
எதிர்வரும் அந்தணரை ஈன்றதாய் வினுதல்.

### கட்டளைக் கலித்துறை.

வெடித்துச் சிவந்தஅப் பாலைக்கப் பாலை வெயிலின் வெப்பம்
பிடித்துச் சிவந்தனளோ? அந்தணீர் கண்ணன் பேரைவெற்பில்
வடித்துச் சிவந்தசெம் பஞ்சோ டனிச்ச மலருறுத்தித்
தடித்துச் சிவந்தன கண்டீர் மடந்தைபொற் றுளிணையே. (27)

''வேனிலஞ் செல்வன் சுவைத்து உமிழ்பாலை'' என்னும்படி உஷ்ணம் தாங்காமல் நீர் வற்றி வெடித்துச் செம்பொடி பரந்த அந்தப் பாலை நிலம் என்க. அப்பாலை - அந்த இளம் பெண். ''அனிச்ச மலரும் அன்னத்தின் தூவியும் மாதரடிக்கு நெருஞ்சிப் பழம்''. (குறள்) என்பர் இவளது கால்களும் அங்ஙனமே கன்றிச் சிவக்கும் தன்மையன அந்தோ! இச்சிறுமி பாலை நிலத்தின் வெயில் வெப்பத்தால் கன்றிச் சிவந்தனளோ? என்று எதிரே வருகின்ற அந்தணரை வினவுகின்றாள் தாய்.

மறம்

### பதினான்கு சீர் சந்தத் தாழிசை.

தாளெ டுத்துலக ளந்த பேரைமுகில்
தனத ருட்குறுகி லத்தேவர்
தையலைப்புதும ணங்கு றித்தெழுது
சருகு கொண்டுவரு தூதனே!

வேளெ டுத்தவடி வேலின் ஏர்பொருவு
மிலைஎ டுத்தஅரசு சிரசுஎலாம்
வெட்டி விட்டுதிரு முகம லாதுதிரு
முகமும் வேற்றிவ தில்லையாம்

நாளெ டுத்தபடை மாடெ டுத்ததிலே
நாணி அப்பிழையின் இன்னமும்
நரப தித்தலைவர் தலையெ டுத்ததலை
நமனெ திர்த்துவரு மாயினும்

வாளெ டுத்தும்வரி சிலைகு னித்தும்வளை
தடிபி டித்தும்நமர் வெல்வரால்
மனுவ ரம்பழியும் நாளும் எங்கள்குல
மறவ ரம்பழிவ தில்லையே. (28)

தாள் எடுத்து - (ஒரு காலைப் பரப்பி) மற்றொரு காலை உயர்த்தி (திரிவிக்கிரமனாகி) பேரை முகில் - தென்திருப்பேரையில் வீற்றிருந்தருளும் நிகரில் முகில் வண்ணன். குறுநிலத் தேவர் - குறுநிலத் தலைவர்கள் தையலை - குமரிப்பெண்ணை. புதுமணம் - நூதன விவாஹம். புதுமை இல்லாத மணமும் உண்டு என்பது குறிப்புப் போலும். எழுது சருகு - பசு மஞ்சள்; நீர்ப் பசையில்லாது உலர்ந்தது ஒரு ஓலை (திருமுகம்) வேள் எடுத்த வடிவேலின் ஏர் பொருவும் இலை - முருகன் கையிலுள்ள கூரிய வேலாயுதத்தின் அழகைக் கொண்ட அரசிலை. அரசின் சிரசு எலாம் - அரச மரத்தின் உயர் கொம்புகளை எல்லாம்; அரசர்களின் தலைகளை எல்லாம் வெட்டிவிட்டு உதிரும் முகம் அலாது வேறு திருமுகமும் அறிவதில்லை என்று கேலி செய்கிறார்கள். நாளெடுத்த படை - நன்னாட் செய்த மாடு பிடியாகிய முதல் நாட் போரிலேயே ''கன்னிப்போர்'' (கம்பன்) என்றபடி. ''சண்டைக்கு எது பிடி மாடு பிடி'' என்பது பழமொழி. இதனை நிரை கவர்தல் என்பர். நாணி - வெட்கி நரபதித் தலைவர் - சக்கிரவர்த்திகள். தலை எடுத்தது இல்லை - தலை நிமர்ந்து இன்னும் பார்த்தது இல்லை. நமன் - யமன். சிலை குனித்து - வில் வளைத்து. வளைதடி - பார வலையம். நமர் - நமன் எதிர்த்து வருமாயினும் என்பதற்கு ஏற்ப நம்மவர் (பல யமன்கள் என்னும்படி) நமர் என்கிறார். மநுவரம்பு - அரசர் நீதிச் சட்டம். மறவரம்பு - மறவர்களின் கட்டுப்பாடு; மறவர்களின் கணை. தேவர், தலைவர் என்பன மறவருக்குச் சிறப்புப் பெயர்கள்.

இச் செய்யுளில் தூதனே! என்ற விளி இகழ்ச்சிக் குறிப்பாய் வந்தது. அறிவில்லாதவனே! என்றபடி. மறவர்களின் வீரம் தோன்றவும், மறவர்தம் கட்டுப்பாடு தோன்றவும், விருதுப்பெயர்கள்

தோன்றவும், நாட்போர், திரை கவர்தல் தோன்றவும், "நல்ல சிங்காரம் வீரம் நகை சாந்தம் கருணை குற்சை, ஒல்லு மற்புதம் பயத்தோடுறு கோபம் இரதம் ஒன்பான்" (சூடாமணிநிகண்டு) என் பதற்கிசைய, நகைச்சுவை தோன்றவும் பாடிய நயம் காண்க.

(கொளு)

கடல்ஒலி, அன்னையர், கலைமதி, குயில், மதன் -
படை, குழல், வருத்தவும் பரிந்து பேசுதல்.

பன்னிருசீர்க் கழிநெடிலடி

இல்லத் தடங்கா மடந்தையர்கற்
 பெனவும் பசிக்கென் றிரந்தவர்க்கொன்
றீயா தவர்கைப் பொருள்எனவும்
 இரவிக் கிருள்போ லவுமடியார்

சொல்லத் தொலையா எழுபிறப்பும்
 தொடைக்கும் கருணைக் குழைக்காதர்
துழாய்த்தாள் அளக்கும் புவிமருங்கிற்
 சுற்றிக் கிடக்கும் கருங்கடலைக்

கொல்லத் துணியா அன்னையரைக்
 கொதியா மதியை மதன்படையைக்
கூப்பிட் டழியாக் கருங்குயிலைக்
 கொடுமைப் படுத்தாக் குழலிசையை

அல்லற் படுத்தா அயலவரை
 அளித்துப் பிரிவார் எனஉரையா
தயர்த்துக் கொடுத்த மனமிருக்க
 ஆரை வெறுக்கக் கடவோமே. (29)

வீட்டிலடங்காத பெண்ணின் கற்பும், ஈயாதான் கைப்பொருளும் இரவிமுன் இருள் போன்று கெடும் என்பதனைல், கற்பு நிலைக்க பெண்கள் வீட்டில் அடங்கி இருத்தல் வேண்டும் எனவும், பசிக்கு என்று ஏதேனும் இரந்தவனுக்கு, 'ஆம் தனையும் கைகாட்டி' ஈதல் வேண்டும் எனவும் ஆசிரியர் தம் குறிப்பை முதலடியில் தெரிவித்தல் காண்க. புவி மருங்கில் சுற்றிக்கிடக்கும் கருங்கடல் - பூமிதேவியின் இடுப்பில் நீலச்சிற்றுடையாகச் சுற்றி அவளது மானத்தைக் காக்கின்ற கடலும். அன்னையர் - பத்து மாதம் சுமந்து பாராட்டும் தாய்,

ஊட்டும் தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் என ஐவர். கொதியா மதி - தண்மதி, மதன்படை - மன்மதனின், ''அரவிந்தம் அசோகஞ்ச சூதஞ்ச நவமல்லிகா நீலோத்பலஞ்ச பஞ்சயிதே பஞ்ச பாணஸ்ய ஸாயகா:'' இதையே, அசைவிலா வனசஞ் சூதம் அசோகமே முல்லை நீலம் ஒசியும் வேள்கணைகளாகும்'' எனச் சூடாமணி நிகண்டு கூறும். ''முல்லை யசோகு முழுநீலஞ் சூதப்பூ அல்லி முளரியோ டைந்தென மொழி'' (சேந்தன் திவாகரம்) என்ற படி. குழலிசை - வேணுகானம். ஆரையும் நோவாமல் ஆசிரியர் தம் மனத்தையே நொந்துகொள்ளும் பெருங்குணம் காண்க.

சம்பிரதம்

## எழுசீர்த் தாழிசை

கடல டங்கலுழி ஒருசி ரங்கைபுனல்
கடுகி னும்புகுது மூசிஎம்
மிடம்வ லம்சுழலும் வடத டங்கிரியும்
எமது சம்பிரதம் ஈதெலாம்
உடலி ருந்துமகிழ் குருப ரன்பரவை
உலக ளந்தமுகில் பேரைமால்
அடல்பு ரிந்துபகல் இரவு கண்டதுவும்
அரிய சம்பிரதம் ஆனதே. (30)

அடங்கலுழி - ஓசையடங்கும் பொழுது. ஒரு சிரங்கை புனல்- உள்ளங்கை நீர் (ஆசமன தீர்த்தம் அகஸ்தியருக்கு) கடுகினும் புகுதும் - கடுகினுள்ளும் நுழைவோம். கடுகினும் புகுதும் ஊசி - குண்டூசி கடுகினுள்ளும் புகும் இயல்புள்ளது என்றபடி. எம் இடம் வலம் சுழலும் - தையல் தைக்கும் பொழுது எம் இடப்பக்கமும் வலப்பக்கமும் சுழன்றும் வரும். வடதடங்கிரியும் எம் இடம் மூசி வலஞ்சுழலும் - எம்மோடு பொருந்தி மஹாமேரு பர்வதமும் (பிர தக்ஷிணமாக) யாம் பிராணயாமம் செய்யும் பொழுது வலம் சுழன்று வரும். உடல் இருந்து மகிழ் குருபரன் - இருபத்தாறுவது தத்துவப் பொருளாய் எம் உடலில் இருந்து சந்தோஷிக்கிற ஆசாரியன். முகில் - நிகரில் முகில் வண்ணன். பேரை மால் - மகரபூஷணப் பெருமானே, ''லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம் அஸ்மத் ஆசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம் பராம்'' என்றபடி. அருச்சுனனைக் காத்தற்கு, ஜயத்திரதனைக் கொன்று பகல் இரவு

கண்டதுவும் அருமையான இந்த ஜால வித்தையினாலே என்றபடி. சம்பிரதம் - ஜால வித்தை.

**வெண்பா**

தேவகியார் பெற்ற திருவருத்தம் ஓராமல்
கோவிய சோதை குழைக்காதா! - தாவி
அடிக்குங்கை மாறோ அஞ்சினைபோற் காது
பிடிக்குங்கை மாறோ பெரிது? (31)

ஓராமல் - எண்ணாமல். மலைநாட்டு வழக்கச் சொல். கோவி- கோபித்து; கோபி, கோபஸ்திரி, ஆய்ச்சி. கைம்மாறு - சிறு வளாறு. தோற்புக்கரணத்துக்குக் காது பிடிக்கும் கைமாறு.

(கொளு)

விடம்என மதி நிலவெறிக்க நேரிழை
இடம்இலை எங்கணும் ஒதுங்கஎன் றேங்குதல்.

**அணைவுறக் கலிவிருத்தம்.**

பெருவிட வரவணைப் பேரை மாதவன்
மருவிட வருகிலன் மங்கை மாதரே !
தருவிட வெண்ணிலாத தழைந்த தெங்கணும்
ஒருவிட மிலைஎனக் குறைவி டங்களே. (32)

முதலடிக்கு "பரம்பணையிற் கண்ணினை துயிலும் என்பற்ப நாப முகுந்தா! "தென்பேரை இறையவனே" (பாமாலையந்தாதி 40) என்பதில் நோக்கு மருவிட வருகிலன்-அணைய வருகிறானில்லை. எம்பெருமான் உகந்து எழுந்தருளியிருக்கும் நூற்றெட்டுத் திருப்பதி களிலும் விடம்தரு வெண்ணிலா தழைந்தது ஆதலின் எனக்கு ஒதுங்க ஒரு இடம் இல்லை என்று தலைவி ஏங்குகிறாள். "அகலகில் லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறையும் மார்பன்" ஆதலின் பிரிவாற்றகில்லா அவனைவிட்டு என்னை நோக்கி இங்கெய்துவதெங்ஙனம்? என்னும் நினைவால் 'மாதவன் மருவிடவருகிலன்' என்கிறாள்,

கார்

### கட்டளைக் கலித்துறை.

உறைக்கோடும் ஆடவர் வாளால் ஒருகொம் பிழந்துமற்றைப்
பிறைக்கோடு கொண்டுழல் குஞ்சரம் போன்று கொடியிடையீர்!
துறைக்கோடு வாய்வைத்த மால்பேரை யில்தென்னர் சூழ்ந்தபண்
டைச்
சிறைக்கோடு மேகம் பிறைக்கோடு தாங்கிச் சிறக்கின்றதே. (33)

உறைக்கு ஓடும் - உறையின் உட்புகும். ஆடவர் - வீரர். பிறைக்கோடு - பிறை போன்ற யானைக்கொம்பு. உழல் குஞ்சரம் - திரிகின்ற யானை. துறை - கூட்டுப் புனல்த்துறை; திருச் சங்கு அணுகுதுறை எனினுமாம். கோடு வாய் வைத்த மால் - விஜயனுக்காக அச்சுத நந்தைக் குறித்தான். (பாமாலையந்தாதி 96) என்றபடி. தென்னர் - பாண்டிய மன்னர். சிறக்கின்றது - அதிர்கின்றது.

தூது.

தலைவி நீர்ப்பறவைகளைத் தூது செல்ல வேண்டுதல்.

### எழுசீர்த் தாழிசை.

சிறந்தார் தொழத்தரும் மருந்தாய் உறப்பெயும்
செழும்பேரை அத்தர் அவர்பால்
அறந்தான் உறக்குரு கினங்காள்! மடப்பெடை
அனங்காள்! உரைத்த ருளுவீர்
இறந்தாம் எனிற்பிழை இருந்தாம் எனிற்பழி
இரங்கா மனத்தர் அவர்போல்
மறந்தால் நினைக்கவும் நினைந்தால் மறக்கவும்
மனந்தான் எமக்கும் இலையே. (34)

சிறந்தார் தொழத்தரும் மருந்து - மறுவிலா மரபுடையர் (19) என்றபடி நல்லாரான ஜைமிநீய தலவகார சாம வேதியரான பூர்வசிகை ஸ்ரீவைஷ்ணவர் தொழ, அபீஷ்டங்கள் அனைத்தையும் வளங்குகின்ற ஆராவமுது. உறப்பெயும் - மிகுதியாகப் பொழியும். அறம்தான் உற - புண்ணியம் கிடைக்கும்படி. இறந்தாம் எனில் பிழை - ''மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண் பிறந்தே'' (திருவாய் 5-4-3) என்றலின் பிழையாகும். பிரிந்தும் உயிர் வாழ்

தல் பிறர் ஏச இடமாதலின் பழி. 'இரங்கா மனத்தர் அவர்' என்றது. "கொடியார் வரும் என்று குலாவுவதோ?" (கம்ப-சுந்தர) என்றபடி ரோசத்தால் வந்தது. நாயகன் பெயர் கூறுராதலின் அவர்போல் என்றுள். அகத்தவரை மறப்பதும் நினைப்பதுவும் எங்ஙனம்? என்பது கருத்து. நாயக நாயகியர் தம்முள் ஒருவருக்கு இருந்தாற் போதுமோ? இருவருக்கும் வேண்டாமோ? என்னும் பொருளில் 'எமக்கும்' என்று பன்மையாற் கூறினள்.

கொளு

கூற்றாய் நிலவு கொடுந்தழல் எறிப்ப
ஆற்றுத் தலைவி அனத்தொடு விளுவல்.

வெண்பா.

எமக்குமுகம் வாட எறிந்தால் மரைகள்
தமக்குமுகம் வாடும் சலிப்பென்? - அமைத்துரைமின்
பெண்மதியின் என்னுமல் பேரைநாட் டன்னங்காள்
தண்மதியின் உண்டாம் தழல். (35)

வாட எறிந்தால் - தீயாகவே வீசிற்றுயின். மரைகள் - தாமரைப் பூக்கள். சலிப்பு என்? - நடுக்கம் எதற்காக? அமைத்து உரைமின் - பொருந்தச் சொல்லுங்கள். பெண்மதியின் என்னுமல் - அவையும் பெண் ஆதலின், பெண் புத்தியின் என்று பதில் சொல்லாமல். வேறு காரணம் உண்டாயின் அன்னங்காள் அமைத்துரைமின் என்று கூறுகிறுள். "பின்னும்" நடையனப் பெடை நீவிர் நடு இனிச் சொல வேணுமே" (95) எனல் காண்க. தழல் - நெருப்பு. சிவனது நெற்றிக் கண்ணின் தீமேலிருந்து சூடு ஏறித் தழல் வீசுகின்றது போலும் என்றபடி. "வெண்டிரையின் ஆலமுண்டு அமுத மெய்துகள் கொண்ட வானவன் ... குளக்கண்ணூடெழும் தழல் படிந்தாய்" (பத்ம நாபன் பிள்ளைத் தமிழ் அம்புலிப் பருவம் ஒப்புக் காண்க)

(கொளு)

தலைவன் சூழ் பொய்த்தற்குத் தலைவி இரங்குதல்.

## பதினொன்கு சீர்ச் சந்த விருத்தம்.

தழல்பி ழிந்த சாறு மொண்டு சந்த னத்தி லிட்டதார்?
தண்ணி லாவை எரித ரச்ச மைத்து விட்ட பாவியார்
குழல்பி ழிந்த இசையி லேகு ளிர்ந்த சிங்கி இட்டதார்?
கொடுமை வந்த காலம் ஆசை கொண்டி ருக்க வல்லேமோ?
நிழல்பி ழிந்து பருக என்று நிலையும் ஈர்ம ருதமும்
நெரிய வென்ற குரிசில் பேரை நீர்க்கு ளிக்கும் நாரைகாள்!
அழல்பி ழிந்த வேலர் என்மேல் ஆணை யிட்ட கன்றுரால்
அந்த வாய்மை உடல்பி ழிந்தென் னுவி யுண்டு விட்டதே. (36)

தழல் பிழிந்த சாறு மொண்டு - அக்நித் திராவகத்தை முகந்து. 'தழற் குழம்பு' (5) என்றதும் காண்க. எரிதர - நெருப்பு வீசும்படி. குழல் பிழிந்த இசை - புல்லாங்குழல் வடித்துத் தந்த கீதம். சிங்கி - ஒருவித பாஷாணக் கல். குளிர்ந்து கொல்லும் இயல் பினது. இருக்க வல்லேமோ? - உயிர் தரித்திருக்க சக்தியுடையோ மாவோமோ? மாட்டோம் என்றபடி. நிழல் பிழிந்து - நிழலையும் பிழிந்து. ஈர் மருதமும் - மாறுயிணைந்த நள கூபரர் என்னும் இரு மருத மரங்களும். குரிசில் - பாலகிருஷ்ணன். அழல் பிழிந்த வேலர் - கோபமே உருக்கொண்டாற் போன்ற வீரர். வேலர் என்ற தனால் வேந்தற்கு உற்றுழிப் பிரிதல் எனக் கொள்க. அந்த வாய்மை - அந்த முழுப்பொய் என்றபடி.

வண்டு.

வண்டினொடு வினவுதல்.

## பின்முடுகு வெண்பா.

ஆவியுண்டு மையுண் டறிவையுண் டாடுமிரு
காவியுண்டு தாமரையிற் கண்டதுண்டோ? - தாவியன்று
மால் வளர்ந்த பேரையின்கண் வாவிகண்டு பூவையுண்டு
கால்வளர்ந்த நீலவண்டு காள்! (37)

ஆவியுண்டு - அவை சலிப்பதனால் உயிர் உளது. மைஉண்டு - கண்ணில் எழுதும் மையும் இடப்பெற்றுள்ளது. அறிவை உண்டு

ஆடும் இரு காவி உண்டு - கண்டவர் தம் கல்வி அறிவையும் விழுங்கி வென்று விளையாடுகின்ற இரண்டு கருங்குவளைப் பூக்கள் மலர்ந்துள. தாமரையில் - ஒரு தாமரைப் பூவிலேயே, என்ன ஆச்சரியம் நான் கண்டேன் வண்டுகளே! நீங்கள் கண்டிருக்கிறீர் களா? என்று கேட்கிறான் தலைவன். இது தலைவியின் முகத்தையும், கண்களையும் வியந்து கூறியவாறு. வண்டுகள் ஸாரக்ராஹிகளாய் வந்து கமலமது உண்ணும் இயல்பினவாதலின், வாவிகண்டு பூவை யுண்டு கால் வளர்ந்த நீல வண்டுகாள்! என்று கருத்துடைய மொழி கொடுத்து அழைத்தனர். மால் அன்று தாவி அளந்தது - திருமால் வாமனனாகி நீர் ஏற்று, திரிவிக்கிரமனாகி வளர்ந்து, பூமியனைத்தையும் அளந்தது. ஒரு தாமரைப் பூவில் இரண்டு கருங்குவளை பூத்திருப்பது கண்டதுண்டோ? என்றதில் வியப்புத்தோன்ற வைத்தமை காண்க. 35 ல் அன்னத்தையும், 36 ல் நாரையையும் வினவினவள் இங்கு வண்டினோடு வினவுகிறாள்.

(கொளு)

தலைவன்; தலைவியைப் போகம் வேண்டுதல்.

### அறுசீர்க்கழி நெடிலடி.

வண்டிருக்கும் குழற்புறத்து மாட்டிமடித்
துப்பிடித்து வளைத்த வள்ளைத்
தண்டிருக்கும் குழைமடவீர்! குழைக்காதர்
மாநகர்முத் தமிழே போல
உண்டிருக்க உவட்டாத இதழமிழ்தும்
இளநீரும் உங்கள் பாலிற்
கொண்டிருக்கப் பெருங்காமப் பசிக்குதவா
திருப்பதுங்கட் கொடுமை தானே. (38)

வண்டிருக்கும் குழல் - வண்டு மொய்த்தனைய கூந்தல். மாட்டி - காதணியிலிருந்து தலையில் மாட்டிக்கொள்ளும் ஒரு வகை ஆபரணம். வள்ளை - வள்ளைக்கொடி. குழை மடவீர்! - குண்டலம் அணிந்த இளம் பெண்களே! மாநகர் - பேரெயில் மாநகரம். உவட்டாத - தெவிட்டாத. இதழ் அமிழ்து - இதழிரசம் (அதராமிர்தம்) இளநீர் - செவ்விளநீர் போன்ற இரு தனங்கள். உங்கள் பாலில் - உங்களிடத்தில். உம்கட் கொடுமைதானே - தாட்சண்ய

மின்மைதானே? இச் செய்யுளில்; அமிழ்து, இளநீர், பால் என்னும் தாபம் தணி பொருள்கள் கூறிய நயம் காண்க.

(கொளு)

தலைவனைத் தலைவி ஏளனம் செய்தல்.

**வஞ்சி விருத்தம்.**

கொடித்தேரினர் குழைக்காதினிர் குலக்கார் வரைமேற்
பிடித்தீர்தழை கெடுத்தீர்கரி பிணைத்தே டுவதேன்?
அடித்தாமரை நடப்பீர்அவை அடைத்தா ளுவரோ?
தொடித்தோழியர் புனச்சார்புது தொழுத்தா ளிடுவஃதோ?

கொடி - அரச சின்னத்தில் ஒன்றான துகிற்கொடி. குழைக் காதனிர் - குண்டலம் அணிந்து தீக்ஷிதர் போல விளங்குகிறீர். கார்க்குலவரை - மேகங்கள் தவழும் வராககிரி என்னும் பன்றிமலை. தழை - தலைவிக்குக் கூறையாகத் தலைவன் கொடுக்கும் ஒரு வகை கையுறை ஆடை. இது தழையால் ஆவது பற்றித் தழை எனப் பட்டது. கரிகெடுத்தீர் - ஆனையைக் காணாது அலைகின்றீர். பிணை - பெண்மான். தொடி - தோள் வளை. தேருடையவராயிருந்தும் நடந்தே வருகின்றீர், அரச சின்னமுடையவர், குண்டல தீக்ஷித ராகக் காணப்படுகிறீர், யானையைக் காணோம் என்று சொல்லிக் கொண்டு மானைத் தேடுகிறீர், தோழியரின் புனச்சார்பு உது தொழு வாயிருந்தால் அவர் அடைத்துத் தாளிடுவர். அடைத்துத் தாளிடும் தொழுவோ? இல்லையே என்றபடி. ஒன்றுக்கு ஒன்று முரணைப் பேசுகிற உம் அறிவுதான் என்னே? என்று கேலி செய்கிறாள் தலைவி. அது, இது, உது என்பன காண்க.

தவம்.

**கட்டளைக் கலித்துறை.**

தொழும்பாக் கியஅண்டர் தொழக்கற்ப காடவிச் சூழலிற்றேன்
எழும்பாக் கியமன் இருப்பதெல் லாம்இந்து வட்டம்தட்டித்
தழும்பாக் கியபொழில் சூழ்பேணை மால்சர ணாரவிந்தம்
செழும்பாக் கியமென் றவனடி யார்பணி செய்தவமே. (40)

அண்டர் தொழும்பாகி எனக் கூட்டுக. ஓசை இனிமைக்காக ஒற்று மிக்கது. பாக்கியமன் - செல்வத்தையுடைய இந்திரன்.

இந்து வட்டம் - சந்திர மண்டலம். பொழில் - சோலை. ஈற்றடிக்கு சரணாரவிந்த சேவையே தவம் என்பது குறிப்பு. ''தான்பணிவார் கண்டீர் அமரர்தம் போகத்தால் பூமியாழ்வார்.'' (இயற்பா முதல் 46.) ''துணை மலர்த்தாள் நிரந்தரம் போற்றுமவரே புரந்தரர் நிச்சயமே.'' (பாமாலையந்தாதி 89) ஒப்புக் காண்க.

(கொளு)

தலைவனை எதிர்கொள்ளச் சந்தனம் பூசிய
சிலைநுதற் றலைவிதன் சேடியோடு செப்புதல்.

**அறுசீர்க்கழி நெடிலடி.**

செய்யிற் கரும்பும் வளர்பேரைத்
திருமால் திருவா டணையீர்!என்
தொய்யிற் கரும்பும் மலர்க்கணையின்
தொழிலுக் கரும்பும் விழியும்மதன்
கையிற் கரும்பும் மலர்க்கணையும்
கைக்கொண் டெழுதித் தந்தனிர்வேள்
எய்யக் கரும்பும் கணையுமிலை
இனியாம் இறவா திருப்போமே. (41)

மன்மதன் கையிலுள்ள கரும்பு வில்லையும் பூ அம்புகளையும் கயற்கொடியையும் கைப்பற்றிக் கொண்டு, என் தொய்யிற் கரும்பும் கணையும் விழியுமாக விலை எழுதித் தந்துவிட்டீர் ஆதலின் இனி அவன் நம்மை ஒன்றும் செய்வதற்கில்லை, யாம் இறவோம் என்கிறாள் சேடியை நோக்கி.

(கொளு)

பவனி கண்ட தலைவியிலை கண்டு
கவலை கொண்ட செவிலி வேண்டுதல்.

**பன்னிருசீர்க் கழிநெடிலடி.**

இரும்பை நெரித்துத் துதிக்கை எடுத்
திளங்கோ மகளிர் விரல்நெரிப்ப
எதிர்ந்தார் சிரத்தை நெரித்துமலை
இடறி நெரித்துக் கடப்பெருக்கிற்

சுரும்பை நெரித்து வளிகறங்கச்
சுழற்றும் புழைக்கைச் செவிப்படலத்
துங்கக் களிற்றின் மிசைப்பவனி
தொழுதாள் விரகம் தொலையாயோ?

கரும்பை நெரித்துக் குடப்பலவின்
கனியை நெரித்து மடல்முதுகின்
கதலிப் படலைக் குலைநெரித்துக்
கன்னிக் கமுகின் மடல்நெரித்து

குரும்பை நெரித்துத் தேனொழுகும்
குவளை நெரித்துப் புடைத்துவரால்
குதிக்கும் புனற்பே ரையின்மகரக்
குழையாய்! தொழும்எம் கோமானே! (42)

இரும்பை - இரும்புச் சங்கிலியை. துதிக்கை எடுத்து - தும்பிக்கையை உயர்த்தி, இளங்கோ மகளிர் விரல் நெரிப்ப - அரசிளங்குமரியர் அச்சத்தால் கைவிரல்களை நெரிப்ப. எரிந்தார் சிரத்தை - பகைவர்களின் தலைகளை. கடப்பெருக்கின் - கன்னமதம், கபோல மதம், பீஜ மதம் என்ற மும்மதப் பெருக்கின். சுரும்பு - வண்டு. (மும்மதமும் வாசனையுடையது ஆதலின் வண்டுமொய்க்கும்; அதனைக் கையசைத்தலாலும் காது ஆட்டுதலாலும் அடிக்கடி ஓட்டுவது ஆனையின் இயல்பு) வளிகரங்க - காற்றுச் சுழல. புழைக்கை - தூம்புக்கை. செவிப் படலம் - அகன்ற காதுகள். துங்கக் களிறு - உயர்ந்த கொம்பன் யானை. பவனி - ஊர்வலம். விரகம் - கடலன்ன காமநோய். குடப்பலவின் கனி - குடம் போன்று உருண்டு பருத்த வருக்கைப் பலாப் பழம். கன்னிக் கமுகு - இளங் கமுகு. மடல் - பாளை மடல். குரும்பை - செவ்விளநீர். குவளை - கருநீலம். வரால்- ஒரு வகை மீன். இச் செய்யுளில் நெரித்தல் என்னும் சொல்லை பத்துத் தடவை நெரித்துப் பெய்து, விரகம் தொலை என்று வேண்டுதல் காண்க.

(கொளு)

தலைவனை எள்ளித் தலைவி பதில் மறுத்தல்.

**எண்சீர்க்கழி நெடிலடி.**

மானென்பார் கலைஎன்பார் தொடுக்க வாடும்
　　மலர்த்தழையால் எய்தவரும் மத்தவேழம்
தானென்பார் பிடிஎன்பார் பதியா தென்பார்
　　தாமரைப்பூங் கோயிலென்று தவிர்ந்ததென்பார்
கோனென்பார் குலத்துதித்த கருணை மேகம்
　　குழைக்காதர் பேரையின்பூங் கொம்பே! வம்பார்
ஏனென்பார் இலைஎன்பார் அலையேன் என்பார்
　　இவர்கோட்டிக் கெதிர் உரைப்பார் யாவர்தாமே? (43)

மான் - பெண்மான். கலை - ஆண்மான். மத்தவேழம் - ஆண்யானை. பிடி - பெண்யானை. மான் - கலை. மத்தவேளம் - பிடி. என்பன ஒன்றுக் கொன்று எதிர் மூராணகப் பேசுகின்றார். பதியாது? என்பார் பின்பு தாமரைப் பூங்கோயில் என்று தவிர்ந்தது? என்பார். இதிலும் அறியாமையும் அறிவினையுமாகவே பேசினார். ஏன்? என்பார் இல்லை என்பார். ஆனால் அலையேன் - திருப்பாற்கடலான் என்று தலைமை தோன்றப் பேசுகிறார். (இனி அலைய மாட்டேன்) இவற்றால் இவர் வம்பர். இவர் தம் (பிராந்தி) மயக்க மொழிக்குப் பதில் சொல்பவர் யாவர்? (பிராந்தராக) மயங்கியவராக அன்றோ இருக்க வேண்டும் என்று கேலி செய்கிறாள் தலைவி. பதி - ஊர், திருப்பதி. இச் செய்யுளுக்கு "வம்பார் வினைச் சொல்லவோ எம்மை வைத்ததே" (திருவிருத்தம்) என்பதில் நோக்கு. கோன் என்பார் குலம் - அரசர் குலம். (இடையர் குலம், யாதவ குலம்) இங்கு தாசரதி, கண்ணன் இருவரையுமே குறிப்பது காண்க. கோட்டி என்ற சொல்லை நகைச் சுவை தோன்ற வைத்தமை காண்க.

(கொளு)

தம் தரம் கூறித் தலைவியை வேண்டுதல்.

**அளவடி வஞ்சித் தாழிசை.**

தாமோதர மதுசூதனர் தருபேரையின் மடவீர்!
நாமோதரம்? மாமோகனர் நலமோதாம்? அறிவீர்
யாமோதரம் அயல்வேறிலர் அடியேனிடம் முனியப்
போமோ?தர நினைவீர்கமழ் பொதிவாய்மலர் அமிழ்தே. (44)

மடவீர்! - உயர்த்தற்கட் பன்மை விளியாக வந்தது. மாமோகனர் - இலக்குமி தேவியை மோகிக்கச் செய்பவர். இரண்டாமடியின் பொருள், திருவும் திருமாலும் போன்று நம் தரம் உளது என்று தம்மை வியந்து கொள்வதாகும். இவ்வடியிலுள்ள ஓ இரண்டும் ஆச்சர்ய குறிப்பு. மூன்ருமடியில், பிறர் விஷயத்தில் தம் தலைமை போன்ற 'யாம்' என்று உயர்த்திக் கூறினன் ஆயினும், தலைவி விஷயத்தில் அவளுக்குதான் இட்ட வேலை செய்யும் பணியாளன் என்பது தோன்ற அடியேன் என்கிருன். முனியப் போமோ? - கோபிக்கலாமோ? முதலடியில் தரு பேரையில் மடவீர்! - (அபீஷ்டம்) விரும்புவதை நல்கும் பேரையில் வாழ் மடவீர்! என்று கருத்துடை அடைமொழியால் அழைத்து ஈற்றடியில், கமழ் பொதிவாய் மலர் அமிழ்து தர நினைவீர் என்று, தலைவியை வேண்டுகிருன்.

(கொளு)

பொருள் வயிற் பிரிந்த தலைவர்தம் அறிவுமே
மருளுடைத் தென்று தலைவி இகழுதல்.

### அளவடித் தாழிசை.

தேனுர் பொருளைத் திருமால் தமிழ்ப்பேரை
ஆனுத கல்வி அறிவாற் பயன்நன்றே?
கானுர் கருங்குழலார் காமத்துப் பால்மறந்தே
போனுர் அறத்துப்பால் விட்டுப் பொருட்பாலே (45)

தமிழ் நீதி நூல் முப்பால்களுள், அறம் நிறுவவும்; இன்பம் நுகரவும் பயன்படுவதான பொருளை விரும்பி, முதன்மையான அறத்துப்பாலைத் தளரவிட்டு, பொருட்பாலுக்குச் சென்று, காமத்துப்பால் என்பது ஒன்று உண்டு என்பதனையும் மறந்தே போனுர் என்று தலைவனின் கல்வியறிவின் பயன் தீதாக அன்றே இருக்கிறது என்று அவரது மடமை கூறி ஏளனம் செய்கிருள் தலைவி. கான் - வாசனை. "எள்ளல் இளமை பேதைமை மடன் என்று உள்ளப் பட்ட நகை நான்கென்ப" என்பது தொல்காப்பியம்.

## கலிவிருத்தம்.

பால்வடிஷும் திரன்முலேயும் பச்சுடம்பும் பசுஊம்பும்
நூல்வடிவும் தோன்ருமல் தூணவயிற்றிற் ருேன்றிமுன்னுள்
மேல்வடிவாம் இரணியனே வினேதொலேத்த தமிழ்ப்பேரை
மால்வடிவாம் திருவடிவம் மரகதத்தின் மலேவடிவே. (46)

நூன்முகத்தில் ''கரு இருந்து வளராமல் கற்றூணிற் ருேன் றினேயே'' என்றது இங்கு ஒப்பு நோக்கற்பாலது. முலே பருத்தல், பால் வடிதல், உடல் வெளுத்தல், பச்சை நரம்பு ஓடுதல், வயிறு வீங்குதல் முதலான கர்ப்பக் குறிகளில் ஒன்றும் தூணுக்கு இல்லாமலே தூண் தாயானமையை வியந்து பாடிய நயம் காண்க. தானவ சிசுவுக்காக ஆச்சரியம் தோன்ற அழகிய சிங்கப் பெருமானுன திருமால் மகர பூஷணப் பெருமாளின் ''சென்று சேர்வார்க்கு உசாத் துணையறுக்கும் சௌந்தர்யம் மாநகரிலே கோஷிக்கும்'' என்னும் படியுள்ள அழகிய திருமேனி வடிவம் ''பச்சைமா மலே போல் மேனி'' (திருமாலே) என்றபடி மரகதமலே வடிவேயாகும் என்கிருர்.

## மேகவிடுதூது.

## கட்டளைக் கலித்துறை.

வடித்தூதும் சங்கென வண்டோட்டு மல்லிகை வாயிற்கவ்விப்
பிடித்தூதும் வண்டொடும் பேசுகி லேன்பிரி யாதஜவர்
குடித்தூதும் சென்ற குழைக்காதர்க் கென்மயல் கூறிவரும்
படித்தூதும் சென்றுநீ வாமழை சாரும் பணிக்கொண்டலே. (47)

வடித்து - ஈரத்தை வடித்து. முதலடியோடு ''மல்லிகையே வெண் சங்கா வண்டூத'' (நளவெண்பா) ஒப்பு நோக்குக. ஆசிரியர் கட் குடியை அறவே வெறுப்பவர் என்பது மதுபானம் செய்து வாய் கடையறியாது ஊதுகின்ற வண்டினெடும் யான் பேசவே மாட்டேன் என்பதனுல் அறியலாகும். தூதும் சென்ற என்றதில் இழிவுச் சிறப்பு உம்மை வந்தது. இழிவு என்று எண்ணுமல் தூதும் சென்றவன்பால் உவர் நீரையும் நன்னீராக்கி வாழ உலகினிற் பெய்யும் வண்மையும் தண்மையும் உடையை ஆதலின் நீ தூது சென்று வா என்கிருர்.

(கொளு)

காட்சியின் ஐயம்கொள் கலைவல தலைவன்
மாட்சிமிகு தலைவியை வாய்மொழி வேண்டுதல்.

## பதினாசீர் வண்ணத் தாழிசை.

கொண்டலைக் கோதி வகிரிட் டிருண்ட குழலாஅரே!
குங்குமச் சேறு பூசித் திரண்ட முலைமாஅரே!
தெண்டிரைப் பாயல் மீதிற் றுயின்றும் தெரிமாஅமால்
தென்திருப் பேரை நகரிற் சிறந்து தெரிவீரே!
அண்டர்பொற் பூமி தான்விட் டெழுந்த ருளினீஇரே!
அம்புயக் கோயில் வாழ இருந்த வரும்நாஅமோ?
தண்டமிழ்ப் பாவின் ஊறிக் கசிந்த மொழிதாஅரீர்
சந்தனக் காவின் நீழற் புகுந்தும் மருவீஇரே! (48)

கோதி - சிடுக்கெடுத்து. வகிர் இட்டு - சீமந்த ரேகை நன்கு தோன்ற இருபாடும் ஒதுக்கி. இருண்ட குழலாஅரே - சுருண்டு இருண்ட கூந்தலை உடையவளே! திரண்ட - உருண்டு பருத்த. முலையாஅரே! - கொங்கைகளை உடையவளே! துயின்றும் தெரிமா அமால் - அரிதுயில் கொள்ளும் திருமால் என்றபடி. பேரை நகரிற் சிறந்த - பேரை மாநகர் போலச் சிறந்த, குயங்களோடு மான் பேன்று மருள் நோக்கமும் உடையீர்! என்றவாறு, முன்னிரு அடி களால், கூந்தற் காடுகளால் குசங்களை மறைக்கினும் கலவைச் சந்தனம் பூசிய கொங்கைகள் அறியப்படுகின்றன என்கிறான். மூன்றும் அடிக்கு தேவலோகத்துப் பெண்ணோ? இலக்குமி தேவியோ? என்பது பொருள். ''தேமரு தாமரை யுறையும் நங்கை இவர் என'' (கம்பன் சூர்ப்பனகை 119.) ஒப்பு நோக்குக. ஈற்றடி யில், போகத்துக்கு இசைவான சந்தனக்கா நீழற் புகுந்தும் என்னை அணைய மாட்டீரோ? இனிய பதில் மொழி தாரீர் என்று வேண்டு கிறான் தலைவன்.

(கொளு)

மலர்நறை உண்ணும் வண்டுகளை நோக்கி
தலைவன் தேர் வரவைத் தலைவி வினுதல்.

## கட்டளைக் கலித்துறை.

மருத்தேற லுண்ணும் களிவண்டு காள்!வம்மின் மாலறிந்து
கருத்தே மகிழவும் கண்களி கூறவும் காண்கதலிக்
குருத்தே விசும்பளக் கும்பேரை மால்குழைக் காதர்செம்பொற்
திருத்தே ரினுங்கடி தாய்வரு மோ?அவர் தேர்வரவே! (49)

முதலடியில் ஸாரக் ராஹிகளாய் மகிழும் வண்டுகளே! என்று அழைத்து வம்மின் என்று வரவேற்று முகம் கொடுக்க வேண்டுகிறாள் தலைவி. இரண்டும் மூன்றும் அடிகளில், திரிவிக்கிரமனின் விசும்பளக்கும் செயலை வாழைக் குருத்தே செய்வதாக திருமால் கண்டு மகிழ்வதாகக் கூறும் நயம் காண்க. உலகளந்த முகில் பேரை மால்'' (30) என்றதும் காண்க. ஈற்றடியில் குழைக் காதரின் தேரினும் விரைந்து அவர் தேர் வருமா? என்று தலைவி வினவுகிறாள். குழைக்காதரின் தேர் வீதி மணல் மேடாக இருந்த காலத்திலும் விரைந்து வந்துகொண்டிருந்தமை முதியோர் அனைவரும் கண்டவுண்மை இங்கு வர்ணிக்கப்பட்டுள்ளது.

(கொளு)

பொறுத்திரு வருவார் எனப்புகல் தோழியை
மறுத்தெதிர் மொழியும் தலைவியின் வார்த்தை.

## எழுசீர் வண்ண விருத்தம்.

வரம்படும் கடற்பள்ளி எழுந்தருள் குழைக்காதர்
வதிந்ததென் திருப்பேரை வளவயலிற்
கரும்பையும் கசப்பாக நினைந்தஇன் சுவைப்பாலிற்
கசிந்தசெக் தமிழ்போலும் மொழிமடவாய்!
இரும்புநெஞ் சவர்க்காக நெகிழ்ந்த நெஞ்செமக்காக
இருந்துசஞ் சரித்தாவி அவிதழ்கே
விரும்புநெஞ் செமக்காக மறந்த வன்பவர்க்காக
விரிஞ்சனும் படைத்தான்என் விதிவசமே. (50)

தமிழ் மொழி போலும் இனிய மடவாய்! எனத் தோழியை விளித்து, அவரை இரும்பு நெஞ்சராகவும் வன்புடையராகவும் பிரமன் படைத்தது என் விதி என்று தன்னையே தலைவி குறை கூறிக்கொள்ளும் குணமுடைமை கண்டு இன்புறலாகும். முதலடியோடு, ''பேரை வந்த கொண்டல் மாயவன் துயின்ற கடலே''(8) ஒப்புக் காண்க. இரண்டாமடியினோடு, ''தண்டமிழ்ப் பாவின் ஊறிக் கசிந்த மொழி'' என்பது ஒப்பு நோக்குக. இரும்பு நெஞ்சு - ''இரும்பு போல் வலிய நெஞ்சு'' (திருமாலை) அவர் இதழ்க்கே விரும்பு நெஞ்சு என்றதற்கு, ''செங்கனி வாயின் திறத்ததுவே'' (திருவாய் 7.3.2.) என்பதில் நோக்கு.

### பன்னிரு சீர்க் கழிநெடிலடி

விதிக்கும் தொழிலாற் பலகோலம்
வெவ்வே றெடுத்து நடித்தொருவன்
விளையா டுவபோற் றொலையாத
வினையிற் சுழன்று தடுமாறி
யதிக்கும் சிறிதாம் எறும்புகடை
யானை முதலாம் தொல்குலத்தில்
எல்லாப் பிறப்பும் பிறந்தலுத்தேன்
இனியுன் திருத்தாள் எனக்கருள்வாய்
குதிக்கும் கலுழிப் பெருங்கவுட்டுக்
குறுங்கட் பெருவான் மழைமதத்துக்
கொலைவேட் டுறுதெவ் வுடல்பிளக்கக்
குத்தும் பிறைக்கிம் புரியெயிற்று
மதிக்கும் புகர்மத் தகமுகத்து
வரிவண் டரக்கும் பணைக்கரத்து
மதவா ரணத்துக் கருள்புரிந்த
மகரக் குழைநம் பெருமாளே. (51)

'இயக்குநன் ஒருவன் ஏவுகின்ற தொழிலையே மேற்கொண்டு, ஒரே நடிகன் பல வேடங்களை அணிந்து விளையாடுதலைப் போல, வினையின் வசப்பட்டுப் பிறவி எடுத்துத் திரிந்து, இடர்ப்பட்டு' என்பது முதலடியின் பொருள். ''புனரபி ஜனனம் புனரபி மரணம்'' என்றபடி ''முன் செய்த ஊழ்வினையால் நினையாதிடைந்த நெடுஞ்

சிறை தீர்த்தருள்'' (பாமாலையந்தாதி 20) என்று பிறவித்துயரினை வெறுத்துக் கூறியதும் ஒப்புக் காண்க.

யதிக்கும் - இளைப்பாறும். இனி, யதிக்கும் உன் திருவடித் தாள் எனக்கருள்வாய் எனக் கூட்டுக. 'உருவிற் பெரிய யானை முதலாக உருவிற் சிறிய எறும்பு கடையாக எல்லாப் பிறவியிலும் பிறந்து களைப்படைத்தேன். இனிப் பிறவியை வெறுக்கின்றேன். பாத சேவையே தந்தருள வேண்டும்' என்பது இரண்டாமடியின் பொருள் கஜேந்திரனுக்கு இயல்பாக உள்ள யானையின் உத்தம இலக்கணங்களை வருணித்தது காண்க. ''மூலப்பேர் இட்டழைத்த மும்மதமால் யானைக்கு நீலக்கிரி போல் முந்நின்ற நெடுமாலே.'' (வில்லி பாரதம் கிருஷ்ணன் தூதுச் சருக்கம் 43) என்பது நோக்குக. நம் பெருமானாகிய மகரபூஷணப் பெருமானையே எனக்கும் உன் திருத்தாள் அருளவேண்டும் என்கிறார். பின்னிரண்டு அடிகளிலும். கலுழி - மதப்பெருக்குக் கலங்கல் நீர். கவுள் - மதம் பாயும் கன்னம். குறுங்கண் - சிறியகண். பெருவான் - பெரிய மேகம். குறுமை, முரண்தொடையாக வந்தமை காண்க.

(கொளு)

சுனையாடி இளைத்தேன் எனப்புகல் தலைவியின்
நனையாத கூந்தல் கண்டு தோழி நகையாடுதல்

### எண்சீர்ச் சந்த விருத்தம்.

மகரக் குழைமாயன் பொருநைத் திருநாடன்
  மண்டங் குடிவாழும் தொண்டன் பணிபாதன்
பகரற் கரிதாகும் பரதத் துவபோதன்
  பைம்பொற் கிரிவாழும் செம்பொற் கொடிபோல்வாய்!
சிகரத் தனபாரம் குழையக் குறுவேர்வை
  சிந்தக் கனிவாயின் பவளம் துவர்மாற
தகரக் குழல்பாறக் கலவித் தொழிற்போகம்
  தங்கும் சுனைதான்இங் கெங்கும் கிடையாதே. (52)

பொருநைத் திருநாடு - தாம்பிரவருணி நதி பாய்கின்ற திருவழுதி வளநாடு. மண்டங்குடி வாழும் தொண்டன் - தொண்டரடிப்பொடியாழ்வார். தத்துவ போதன் - தத்துவப் பொருள்களில்

அறிகின்ற புருடனுயிருப்பவன். பைம்பொற் கிரி - வராக கிரி என்னும் பன்றிமலை. சிகரத் தனபாரம் - மலைச் சிகரம் போன்று பருத்துக் கூர்ந்துள்ள கொங்கைகள். குறு வேர்வை - சிறுகப் பொடித்த வேர்வை. கனிவாயின் பவளத் துவர் மாற - கொவ்வைக் கனி, பவளம் இவை போன்று சிவந்த உதட்டின் நிறம் வெளுப்பு ஏற. தகாக் குழல் பார - ''நானக் கருங்குழல்'' (திருவாய் 7. 3. 2) கட்டுக் குலைந்து வீழ்ந்து அலைந்து பரக்க. (கூந்தல் சுருக்கவிழ்ந்து ஆடிப் பரக்க.)

பின்னிரண்டு அடிகளில், கலவிக் காலத்து நிகழ்வனவாகக் கூறி, இங்ஙனம் போகம் தங்கும் சுனை இங்கும் அங்கும் கிடையாதே உனக்கு மட்டும் எங்கு கிடைத்தது? என்று தலைவியைத் தோழி கேலி செய்கிருள். ''நனையாத கூந்தலள் சுனையாடி இளைத்தேன்'' என்றமையின் இது மடன்பற்றி வந்த நகையாகும். ''எள்ளல் இளமை பேதைமை மடன் என்று, உள்ளப்பட்ட நகை நான்கென்ப'' (தொல்காப்பியம்).

(கொளு)

பவனி கண்ட எழுவகை மாதர்
அவனில் நினைவாகித் தளருதல் கூறல்.

### கலி விருத்தம்.

எங்கும்கிடை யாதபே ரின்பந்தரு பேரைமால்
வெங்கண்களி யானைமேல் வேள்கண்டெழு மாதரார்
சங்கங்களை வாரும்நேர் சந்தம்தொலை வாருமாய்
அங்கங்களை யாகவேள் அம்பின்உயிர் வாடுமே. (53)

பேரின்பம் - அந்தமில் இன்பமாகிய வீட்டுலக இன்பம். பேரைமால் தென்திருப்பேரை மகரபூடணப் பெருமான். களியானை மேல் - மத யானையின் மேல். வேள் கண்டு - உலாவருதலை சேவித்து. எழுமாதரார் - பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என ஏழு பருவத்துப் பெண் களும். இவர் முறையே, 7, 11, 13, 19, 25, 31, 40 வயதுக்குட் பட்டவர். சங்கங்களைவாரும் - கை வளைகளை நழுவ விடுவாரும். சந்தம் தொலைவாரும் - பெண்களுக்குச் சிறந்த அணி எனச் சொல்லப்படும் நாணம் முதலியவற்றை இழப்பாரும். அங்கம் களையாக - மெய் சோர்ந்து வீழ. வேள் அம்பின் - மன்மத பாணத்

தினால்உயிர் வாடும் - குற்றுயிராயினர். பேரின்பம் தரும் மாலினிடத்து சிற்றின்பம் வேண்டி விரகம் மேலிட்டனர் என்பது கருத்து.

(கொளு)

தூது செலாக்குரு கினங்களை நோக்கி
வேதனை மிகுதலின் வெறுத்துக் கூறுதல்.

**அறுசீர் வண்ணத் தாழிசை.**

வாடும னைத்துயிர் வாழ அளிப்பவர் மாமக ரக்குழையார்
கூடுபு னற்றுறை ஆடியி னைத்துடல் கூனும்ந ரைக்குருகீர்!
பேடையை விட்டக லாதநீர் முத்தமிழ்ப் பேரைய ருக்குரையீர்
ஆடவர் இப்படி போனபி ழைக்கினி ஆரைவெ றுப்பதுவே. (54)

அனைத்துயிரும் வாழ என்பதன் முற்றும்மை தொக்கது. கூடு புனல் துறை ஆடி - மாகரிக தீர்த்தத் துறையில் நீராடி. ''குள்ளக் குளிரக் குடைந்து நீராடி'' என்றபடி. நரைக் குருகே! - ''ஆசறு தூவி வெள்ளைக் குருகே'' (திருவாய் 6. 8. 8.) என்றபடி.

(கொளு)

தண்டுழாய் வேண்டித் தலைவன்பால் தூதுசெல்
வண்டின் வரவுஎதிர் பார்த்துயிர் வாழ்தல்.

**பதினான்குசீர் வண்ண விருத்தம்.**

ஆர்வெ றுப்பினும் அயல்வெ றுப்பினும்
அன்னை மார்கள்வெ றுப்பினும்
அமிர்த சந்திர கலைவெ றுப்பினும்
அந்தி மாலைவெ றுப்பவேள்
போர்வெ றுப்பினும் மறலி வந்தொரு
புடைவெ றுப்பினும் வளைகடற்
புடவி ஏழும்வெ றுப்பி னும்ஒரு
பொருள தாகம திப்பனோ?
வார்வெ றுத்தெழு கொங்கை மீர்!மக
ரக்கு ழைத்திரு மாலின்நன்
மார்பி டத்தும்வ ரைப்பு யத்தும்ம
ணந்த ழைந்துமு யங்குபைந்
தார்வெ றித்துள வாயி னும்சரு
காயி னும்பெற விட்டதோர்
சாம கீதமொ ழிச்சு ரும்புநாம்
சாம்வெ றுப்பில தாகினே. (55)

ஆர்வெறுப்பினும் - அன்பரே வந்து அணையாது வெறுப்பி னும். அயல் - அண்டை வீட்டார். அன்னைமார் - ஈன்ற தாய், செவிலித்தாய் முதலானோர் ஐவர். சந்திர கலை - நிலவு. வேள்போர் வெறுப்பினும் - மன்மதன் தன் பூங்கணை ஏவிப் போர் தொடுத்து வெறுப்பினும். மறலி - யமன். புடவி ஏழு - ஏழு லோகத்தில் (உள்ளோர்களும்) வார் வெறுத்து - கச்சைக் கிழித்து. 'தனமிரண் டும் வாரைப் பொருது எழுந்த'' (மாறனலங்காரம் 116) நோக்குக. திருமாலின் மார்பிடத்தும், மலைபோன்று பருத்த தோள்களிடத்தும் முயங்கியதனால் மணம் மிகுந்த திருத்துழாய் மாலையாயினும், சருகு ஆயினும் பெறத் தூது சென்ற. சாமவேதம் பாடும் வண்டு என்று கூட்டுக. ''தாராயினும் தண்தழை ஆயினும், கொம்பதாயினும் கீழ் வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே.'' (திருவிருத்தம்) ஒப்பு நோக்குக.

## அறுசீர் வண்ண விருத்தம்.

இலதாகி உளதாகி உடலாகி உயிராகி
இருளாகி ஒளியாகிநீ
பலதாரை வெகுமாயை விளையாடு குணரீதி
பலர்தேவர் அறிவார்களோ?
மலருடு கயல்சாடி மதகூடு புனல்சாடி
வருபேரை நகராளனே!
சிலபேரே அறிவாரும் சதுவேத முதுபோத
தெளிஞானம் உடையார்களே. (56)

பலதாரை - பல வழிகளில். குணரீதி - குணங்களின் ஒழுங்கு புனல் சாடி - வெள்ளச் சாட்டம் என்பது மலை நாட்டு வழக்கச் சொல். நீர் வீழ்ச்சி என்பது பொருள். கடைசி அடிக்கு, ''தஸ்ய தீரார் பரிஜானந்தி யோனிம்'' (புருஷசூக்தம்) என்பதில் நோக்கு. சதுவேத முதுபோத தெளிஞானம் உடையார்கள் சிலபேரே அறிவாரும் என்று கூட்டுக. சதுவேத, முதுபோத என்ற சொல் நயம் காண்க. சில பேரே - நம்மாழ்வார் போன்று பிறர் அறிவு கனையும் கூர்மையாக்க வல்ல சிலரே என்றபடி.

புய வகுப்பு.

முப்பத்திரண்டு சீர் வண்ணம்.

உடையக் கலசத் ததிகொட் டிஎடுத்
திதழ்வழி ஒழுகிய திவலைபொ சிந்தன
உரலைக் கதவுக் கடையிட் டுயரத்
துதிபல தடவிவெண் ணறுநெய்க வர்ந்தன
உடற்கட் டுறுமற் றெழுமிற் கைப் புடைகொடவ்
வசுரரை யமபுரம் அளவுந்து ரந்தன
உயிரைப் பருகக் கருதிட் டலகைப்
பணைவரை முலைமுகம் நெருடியி ருந்தன

படியிற் றுடைமட் டுழலக் கனகனை
நகம்நுனி உழுதடு செருவில்வ கிர்ந்தன
பனையிற் கனியொத் தொருபது முடியத்
தலையுருள் படஅடு பகழிசொ ரிந்தன
பருதிக் கதிருட் புதயத் தமனம்
படாிழல் கெழுமிய தீகிரிசு மந்தன
படிகச் சிகரக் கயிலைப் பரனுக்
கிடுபலி கொடுநிறை அடிசில்வ ழங்கின

கடலைக் கடையப் பருமத் துவலித்
தமரர்கள் பசியற அமிர்தம்வி ளம்பின
களபத் தொளியிற் றுளபத் தொடையிற்
பரிமள ம்ருகமதம் முழுகிய ளைந்தன
கனவட் டமுலைத் திரள்பட் டுருவிக்
கலவியில் வரிவளை பொருதுசி வந்தன
கமலத் தவளைத் தழுவிப் புலவியின்
இளகிய புளகம தொழுகிம லிந்தன

மடையிற் கனியிற் பொருகைத் திரையினில்
மதரிய அரிமணல் இலகுநெ டும்புழை
மதகிற் கதலிப் படலைக் குலையினில்
வளகமு கடவியில் மருவிவ லம்புரி
வயிறெக் கரிடப் புதுமுத் துமிழ்தரு
குருகைய ரதிபதி பாவுநெ டுந்தகை
மகரக் குழையுத் தமன்வித் தியனுயர்
பாகதி முதல்வன் வரைபுரை புயங்களே. (57)

எடுத்த கலயம் உடைய, ததிகொட்டி, இதழ்வழி ஒழுகிய திவலை பொசிந்தன எனக் கூட்டுக. அடையிட்டு-கதவு திறவாதபடி அடையாகக் கொடுத்து. நறு வெண்ணெய் கவர்ந்தன என்று கூட்டுக. மல்த்தொழில் பிடி - தொந்த யுத்தப் பிடிகள். அசுரரை - முஷ்டிகன், சாணூரன் என்னும் இரு மல்லரையும். அலகை - (தன்னை வஞ்சகமாய் மறைத்துக் கொண்டு வந்த) பூதனை என்னும் பேய். முலை முகம் நெருடி - முலைக் காம்புகளை நெருடிக்கொண்டு. படியில் - வாயில் நிலைப் படியில். துடை - ''மடி போர்க் களமா'' (பாமாலை யந்தாதி 39.) என்றபடி. கனகனை வகிர்ந்தன - இரணியனைப் பிளந்தன. ஒரு பது முடித்தலை பனையிற் கனி ஒத்து - பத்துத் தலைகளும் பனங்காய்க் குலைபோல் உருண்டு சிதறும்படி. பகழி - அம்பு. பரிதிக் கதிர் அத்தமனம் பட - ''நீள் சுடரும் அத்தமனம் தர ஆழி தொட்டான்'' (பாமாலை யந்தாதி 6.) என்றபடி. திகிரி - சுதரிசன சக்கரம். படிகம் - வெண்மை நிறப் பளிங்கு. கயிலைப்பரன்- சிவன். இடுபலி - பிச்சை. நிறை அடிசில் - வயிறுர உணவு. (அமிர்தம்) விளம்பின - மோகினியாகி அமிர்தம் வழங்கின. களபத் தொளி - கலவைச் சந்தனக் குழப்பு. ம்ருகமதம் - கஸ்தூரி. கலவியில் - போக நுகர்ச்சியில். வளை - கை வளைகள். கமலத்தவள் - இலக்குமி தேவி. புளகம் - மயிர்க் கூச்சம். மடை - குளந்து நீர் மடைகள். கழி - மறிகால். மதரிய - மிகுதியான. அரிமணல் - நுண் மணல். நெடும் புழை மதகு - நெடுங்கண் மதகு. கமுகு அடவி - கமுக மரம் நிறைந்த காடு. வலம்புரி - வலம்புரிச் சங்கு. குருகையர் அதிபதி - நம்மாழ்வார். மகரக்குழை உத்தமன் வரை புரை புயங்கள்; பொசிந்தன, கவர்ந்தன, துரந்தன, இருந்தன, வகிர்ந்தன, சொரிந்தன, சுமந்தன, வழங்கின, விளம்பின, அளைந்தன, சிவந்தன, மலிந்தன என்று பன்னிரண்டு கடை எதுகை காட்டிப் பாடிய நயம் காண்க. ஈற்றடியில் நீர்வளம் நிலவளங்களை வருணித்து குருகூரன் விரித்த தமிழ்ப் பண்ணின் பெருமையும் கூறி புயவகுப்பு நிறைவு செய்த மேன்மையறிக. இச் செய்யுளின் உரை விரிக்கிற் பெருகும் என்றஞ்சுகிறோம்.

குறம்

## பதினைந்து சீர் வண்ணம்.

புயங்க சேகரர்மு யங்கும் நாயகிபு
கழ்ந்த பேரையைவ ணங்கியே
புரிந்த வாய்மையின்றி கழ்ந்த மாகுறிபு
கன்று வாழ்குறம டந்தை நான்
இயங்கு மாகவுளி யும்பொ லாததிலேஇ
ருந்த மாநகர்இ ணங்கவே
இயைந்து மாநிதிது லங்க வேயருள்இ
ணைந்து வாழுவைஇ லங்கிழாய் !
வயங்கு மாதலைவர் ஐந்துபேரர் அதில்வ
லங்கொள் சேவகர்இ ரண்டுபேர்
வளர்ந்த நாவலர்இ ரண்டுபேர் ஒருவ
னுந்த ராதலம்வ ணங்குன்றேன்
உயங்கு நானுடல்வ ருந்தி னேன்அழுங்கு
ழந்தை தாய்பசிய டங்கவே
உடந்தை யாய்ஒருகு டங்கை கூழுடன்ஒ
ழிஞ்ஞ தூசருள்உ றங்கவே. (58)

முதலடியின் பொருள் :- பார்வதி தேவி புகழ்ந்த தென்திருப் பேரெயில் மாநகரத்தை வணங்கிக் கொண்டு எனக்குத் தெரிந்த அளவில் இங்கு நிகழ்ந்த நல்ல குறிகளைச் சொல்லி, வாழ்வை நடத்துகிற குறத்தியே யான் என்றவாறு. பாய்ந்து ஏறுகிற பல்லி யும் நல்லதையே காட்டுகிறது. பெண்ணே! பெருமாள் வீற்றிருக் கும் இம்மா நகரத்தார் ஒப்புக்கொள்ளும்படியும், செல்வம் தழைக் கும்படியும் நீ விரும்புகிற தலைவனோடு வாழப் போகிறாய் என்பது இரண்டாமடியின் பொருள். மூன்றாமடியில் பஞ்ச பேரர்களில். (அதாவது திருமால் திருக்கோயில்களில் எழுந்தருளி இருக்கும் உத்ஸவ மூர்த்திகள் ஐந்து பேரர் உண்டு) நிகரில் முகில் வண்ணன், மகர நெடுங் குழைக்காதன் என ஒருவன் பூமியிலுள்ளோர் யாவரும் வணங்கத் தக்கவன் என்பதும், உத்ஸவங்கொள் உத்ஸவ பேரர் இரண்டு பேர்கள் என்பதும், யாக பேரர்கள் இருவர் என்பதும்,

சொல்லி ஈற்றடியில் களைத்து வந்த பிள்ளைத் தாய்ச்சியான எனக்கும் குழந்தைக்கும் ஒரு குடங்கை கூழ் வார்ப்பதோடு தலையைச் சுற்றி திருட்டி கழித்து ஒரு ஆடை நல்கு என்கிருள்.

கொற்றியார்.

**எழு சீர் வண்ணம்.**

அரங்கத்து ளேதுயிலும் அருஞ்சக்ர பாணிவயல்
அகம்சுற்றும் பேரைமா நகர்வாய்
கருங்கற்றை வார்குழலை முடிந்திட்ட நாமமொடு
கலந்திட்ட தாழ்வ டம்மால்
விரும்புற்ற தாமம்முலை யரும்புற்ற தாமரையின்
விளைந்துக்க மாம ணிகொலோ?
வருங்கொற்றி யார்அழகின் அருங்கொற்றி யாடலொடு
மருங்கொற்றி யார்அ றிவரே? (59)

தெற்குச் திசை நோக்கித் திருவரங்கத் திடைத் துயில் மால் தென் பேரையில் அன்பேறினர் (76) என்பது ஒப்பு நோக்குக. கற்றை - மயிர்த் தொகுதி. வார்குழல் - நீண்ட கூந்தல். இட்ட நாமமொடு - விரும்புகின்ற திருமண் காப்போடு. கலந்து இட்ட தாழ் வடமுமாய் - முத்தும் பவளமும் கலந்து கோத்த நீண்ட உந்தி வரை தொங்குகின்ற மாலையும். மால் விரும்புற்ற தாமம் - திருமால் விரும்பும் துளசி மணியும். துளசி மணி மாலை புரளும் முலையில் முத்து மாலையும் தாமரை மணி மாலையும் உள்ளது. அத்தாமரை மணியும் முத்தும் முலையாகிற தாமரை முகை விளைந்து அதனின் உதிர்ந்த முத்துக்களோ? என்னும்படியுள என்பது மூன்ருமடியின் பொருள். ஈற்றடியில், இக்கொற்றியாரின் அழகினையும், கொற்றி யாடுதலையும் மருங்கு அணைந்து முழுவதும் அறிபவர் யாவரோ? என்று வியக்கின்ருர்.

வைணவ சின்னம் தரித்து தெருவிலே பிச்சைக்கு வருகிற மகளிரை நோக்கி ஓர் காமுகன் தன் வேட்கையை வெளிப்படுத்துவ தாக பாடுவது கொற்றியார் என்பதன் இலக்கணம்.

(கொளு)

தலைவன் தலைவியொடு சூளுரைத்தல்.

## அளவடித் தாழிசை.

வருகார் முகில் தருபேரெயில் அலர்பூ வணைசேர்
பெருவாழ் வொடும் ஒருநாளுமே பிரிவோம் இலமே
திருவே! அமிழ் துருவே!பொரு சிலைவேள் குருவே!
உருவேறுநம் உடல்வேறுநம் உயிர்ஓர் உயிரே. (60)

அலர் பூவணை - விரிகின்ற மலர் சயனம். சிலைவேள் குருவே! மதனக் கலை கற்பிக்கும் ஆசிரியனே! உறு ஏறு நம் உடல்- அழகு மிகும் மெய், உடம்பு. உடல் இரண்டெனினும் உயிர் ஒன்றே என்கிறான். இதனால் யான் என்றும் பிரியமாட்டேன். உயிரான் உன் ஆணை என்று ஆணையிடுகிறான்.

(கொளு)

மாலையந் நேரம் வருத்தும் எனத் தலைவிபூ
மாலையும் சூடாள் என வளர்த்த தாய்மாழ்குதல்.

## வெண்பா.

உயிர்முடிக்கும் செவ்வந்தி உண்டெனவே கோதை
மயிர்முடிக்கும் செவ்வந்தி வையாள் - அயனல்
பெருத்துளதிக் கேபுகழும் பேரைமால் சாத்தும்
மருத்துளதிக் கேமயலா வாள். (61)

செவ்வந்தி-செவ்வானத்தோடு தோன்றும் அந்திப்பொழுது. செவ்வந்தி வையாள் - செவ்வந்திப் பூமாலையைச் சூடாள். பெருத் துளதிக்கு - பத்துத் திசையிலுள்ளோரும். பேரைமால்-திருப்பேரை யில் எழுந்தருளியிருக்கும் மகர நெடுங்குழைக்காதர். மருத்துளதி - மணங்கமழும் துளசி மாலை. மயலாவாள் - ஆசைப்பட்டு மயங்கி விழ்கின்றாள் என்றபடி.

(கொளு)

தலைவன; தலைவியின் மெய்தொட விழைதல்.

## எழுசீர் வண்ணத் தாழிசை.

மயலற்ற வர்க்கருள்செய் மகரக்கு ழைக்கடவுள்
வராகப்பொ ருப்பின் அயல்சூழ்
முயலைத்தொ டைத்துமதி யதனைப்ப தித்ததென
முகவட்ட மிட்டு வருவீர் !
புயலிற்க றுத்தகுழல் வரையிற் பொருத்தமுலை
புளகிக்கில் இற்று விழும்வேர்
அயலற்ற அற்பஇடை திருநெற்றி யிற்றிலதம்
அழிக்கிற்று டைப்பென் அழகே. (62)

மயல் - மண், பெண், பொன் என்னும் மூவாசை மயக்கம், வராகப் பொருப்பு - வராக கிரி என்னும் பன்றி மலை. ''பேரைய ராதிபன் ஞானப்பிரான் வெற்பிற் பேதை சேர்ந்தேன்.'' (திருப்பதிக் கோவை 55. ஒப்பு நோக்குக.) அயல் சூழ் மதி முயலைத் தொடைத்து அதனைப் பதித்தது என முகவட்ட மிட்டு வருவீர் ! எனக் கூட்டுக. முயல் சந்திரனிலுள்ள களங்கம். இரண்டாம் அடி முழுவதும் தலைவியின் முகத்தை வர்ணிப்பது. அற்ப இடை - மெலிந்து சிறுத்துள்ள இடுப்பு. பொறுத்த - சுமக்கின்ற முலை புளகிக்கில் இற்று வீழும். வேர் - வேர்வை. திரு நெற்றியில் திலகத்தை அழிக்கில் அழகாம்படி துடைப்பேன் என்கிறான். பின்னிரு அடிகளால் துடைப்பேன் வீழாமல் தாங்குவேன் என்று கூறி, தலைவியின் மெய் தொட விழைதலைத் தலைவன் குறிப்பிடும் நயம் காண்க.

(கொளு)

தலைவியின் எழில் நலம் தன்னுயி ருண்ணலைக்
கலைவல தலைவன் பாங்கனொடு கூறுதல்.

## அறுசீர் வண்ணத் தாழிசை.

அழகு தங்கிய மகரவண்குழை அமலர் தண்கிரிவாய்
உழை நுழைந் தெனதுயிரை யுண்ணுது நுவலவும் பருமோ?
மழைசு மந்தலை கடல்சு மந்திணை மலைசுமந் தின்னமிர்தே
தழைய வந்தொரு பொழிலின் நின்றது தனிஇளங் கொடியே.
(63)

அமலர் தண் கிரியினுழை இளங்கொடி ஒன்று மேகம் போன்ற கூந்தற் கற்றைகளைச் சுமந்தும், கடலினும் அகன்ற கண்களைச் சுமந்தும், இரு மலைகள் போன்ற கொங்கைகளைச் சுமந்தும், இனிய அமிர்தம் தழைய வந்து ஒரு சோலையில் நின்றது. அதனை விவரித்துச் சொல்ல என்னால் முடியுமோ? அது என் உயிரை உண்டு கொண்டே இருக்கிறது. என்று உயிர்த் தோழனோடு தலைவன் கூறுகிறான். எங்ஙனமேனும் யான் இவளை அடையும்படி செய்ய வேண்டுமென்பது கருத்து.

(கொளு)

தலைவி கிளி கடிதல் தகாதெனச் சொல்லி
தலைவியொடு தலைவன் உரையாடி மகிழ்தல்

**ஒன்பதின் சீர் வண்ணத் தாழிசை.**

இளங்கொடி இணங்கு முதுசூழல்
நெருங்கிய பொதும்பர் வெளிநீழல்
இதணிடை ஒதுங்கி இளையாடும்நீஇர்
விளம்பிய குளிர்ந்த மொழியூடும்
கரைந்தது கருங்கல் அதுபோடும்
வெறுங்கவண் எறிந்து பயனுஅமோ?
வளந்தலை மயங்கும் தமிழ்நாடர்
செகந்தனில் முகுந்தர் வரும்பேரை
மடந்தையர் வணங்கும் அபிஷேகமே!
தெளிந்தசொல் இனங்கள் எழுநூறு
பசுங்கிளி நிறைந்த புனமீதில்
செழுந்தினை விளைந்த கரைஏறுமே? (64)

இளங்கொடி - முதுசூழல் என்பன முரண்தொடை. முதுசூழல் - பழமையான சோலை. பொதும்பர் - வெளி. இதண் - பரண். இளையாடுதல் - புனங்காவல் செய்தல். விளம்பிய - சொல்லிய. விளம்பிய மொழியூடு கருங்கல் கரைந்தது எனக் கூட்டுக. வளம்தலை மயங்கும் தமிழ் நாடு - நானில வளங்களும் தம்மில் கலக்கும் தமிழ் நாடு - நானில வளங்களும் தம்மில் கலக்கும் தமிழ்நாடு என்றபடி. அபிஷேகமே - கிரீடமே. (வடமொழி). உன் குரல் கேட்டு தம் இனமாக எண்ணி பல கிளிகள் வந்து சேர்கின்ற இப்புனத்தில் உன் புனங்காவல் சிறக்குமா? தினை விளைந்து கரை சேருமா? என்பது கருத்து.

களி

## பதினொரு சீர் சந்தத் தாழிசை.

கரைபு டைத்தமடை முதுகு டைப்பமிளர்
கயல்பு டைத்துலவு பேரைமால்
கருணையைப்புகழ வரும்அ ரற்பிரமர்
களியர் கள்அரியை நறவமாய்

வரிசை யிட்டனர்இ லச்சை ஏதினிம
லைச்சி யைத்தொழும டத்திலே
மதுக்கு டந்தனைஎ டுத்து வைத்ததனை
வளையம் வைத்துநடம் ஆடுவார்.

விரிச டைக்கடவுள் புரிசி ரித்ததுவும்
விடம்மி டற்றினிடைசெ றித்ததும்
வேலுடைக் கடவுள் சூர னைச்சமரில்
வென்ற தும்பொருது கொன்றதும்

அரிம லர்ப்பிரமன் உறுத லைக்குடுமி
அறுத லைக்குறைமு ளைத்ததும்
அன்றெம் ஐயாயுதன் மந்தி ரப்பெருமை
அன்றி வேறுவரம் அல்லவே. (65)

அரன், பிரமன், என்ற பெயர்கள், அரற் பிரமர் என வந்தது சிவனும் நான்முகனும். களியர்கள் - கட்குடியர். மகிழ்ச்சியை உடையவர். அரியே - கள்ளே; விஷ்ணுவே. நறவம்-தேன். வரிசை யிட்டனர் - முதல் தரமாகச் சொல்லினர். இனி இலச்சை ஏது? - இதன் மேல் வெட்கம் ஏன்? மலைச்சி - காளி. மடத்திலே- அறியாமை யாலே, பொது இடத்திலே. மதுக்குடம் - கள்ளுக்குடம், வளையம் வைத்து நடமாடுவார் - அதனைச் சுற்றிச் சுற்றி திரிவார், வலம் செய்து ஆனந்தக் கூத்தாடுவார். புரம் எரித்ததும் - திரிபுரத்தை சிவன் எரித்ததும். விடம் மிடற்றிடை செறித்ததும் - நீல கண்டன் ஆனதும். வேலுடைக் கடவுள் - முருகன். சமரில் - போரில். சூரனை- அதிவீரனை சூர பத்மாசுரனை வென்றதும்.. உச்சிக் குடுமி. (பூர்வ சிகை என்றவாறு) அரி, நறவம், மது, மந்திரம் என்பன கள்ளின் பெயர்கள். எல்லாம் ஐயாயுதன் மந்திரத்தின் பெருமை என்று கள்ளின் பெருமை தோன்றக் கூறிய நயம் காண்க.

(கொளு)

தழை ஏற்றருளத் தலைவியை வேண்டுதல்

**பன்னிரு சீர்க் கழிநெடிலடி.**

அல்லிக் கமலம் அடிபெயா
அருகிற் குவளைக் களமொடிய
ஆம்பற் குழுவின் மடலுடைய
அலையிற் றுழைந்து கரையேறி
நெல்லிற் புகுந்து நெடியவள்ளை
நெரியத் தவழ்ந்து பணிலம்மணி
நிலவைப் பொழியும் தமிழ்ப்பேரை
நெடுமால் பொருநைத் திருநாட்டின்
வல்லிக் கொடியே! மடப்பிடியே!
வனசத் திருவே! அமிழ்துருவே!
வயிரக் கொழுந்தே! மாகதமே!
மயிலே யனையீர்! மழையருவி
கல்லிற் பொரும்நல் வரைச்சாரல்
கடிகா அலைந்து தொலைத்தனன்என்
கையிற் றழையும் முகம்பார்த்தும்
கருணை பொழியக் கடவீரே. (66)

அல்லிக் கமலம் - புறஇதழ்களோடு கூடிய தாமரைப்பூ. குவளை - கருநீலம். ஆம்பல் - செவ்வல்லி. துழைந்து - நீந்தி. நெல் - செந்நெற் பயிர், வள்ளைக்கொடி என்க. பணிலம் - சங்கு. மணி - முத்து. அருவி கல்லிற் பொரும் - நீர் வீழ்ச்சி கல்லினை அகழ்ந்து குழியாக்கும். நல்வரை - (வராககிரி) தழை - தழையா லாகிய ஆடை. வாடாத தழையையும் (என்) வாடிய முகத்தையும் பார்த்து, உம் கருணையைப் பொழிய வேண்டும் என்கிறான். முன்னிரு அடிகளில் பொருநைத் திருவழுதி நாட்டின் வளம் கூறி, சங்குகள் முத்துக்களை ஈன்று நிலவைப் பொழியும் என்று கூறுமுகத் தால் உண்டாகும் நயம் உணர்க.

கைக்கிளை

(கொளு)

தன்னை விழையாத் தலைவனின் தார்பெற
நன்னுதற் பேதை நயந்து நனிவேண்டுதல்.

### வஞ்சி விருத்தம்.

வீர மாரனால்
ஈர மாலைவேம்
நேர மாலைதா
பேரை மாயனே ! (67)

அனங்கனாக இருத்தும் தன் வீரத்தைக் காட்டுகின்ற மன்மதனாலே, எனக்கு இப்பொழுது, குளிர்ச்சியைத் தர வேண்டிய பூமாலையும் கரிந்து சாம்பலாகின்றது என்பது முன்னிரண்டடிகளின் பொருள். பின்னிரு அடிகளில், மகர பூஷணப் பெருமாளே! இனியேனும் என்முன் தோன்றி உன் மார்பினிடத்தும் வரைப் புயத்தும் மணம் தழைந்து முயங்கும் அந்தத் திருத்துழாய் மாலையை எனக்குத் தந்து மணந்து கொள்ள வேண்டும் என்கிறாள்.

(கொளு)

தலைவனை நினைந்து இளம்பேதைபடு துயரினை
அயலவர் அறிய அன்னை உரைத்தல்.

### அறுசீர்த் தாழிசை.

பேரைவ ருங்குழை மாலே! பேதையை வந்தணை யாளுல்
ஈரந ருங்குழ லாரே! எதைநி னைந்தினை நோவேன்
மாரச ரம்படும் பூவே! வாரிவி டும்பனி நீரே!
ஆரவ டம்படும் தூளே! ஆவியை உண்டிடும் தானே. (68)

பேரை வரும் குழைமால் வந்து அணையாளுல், மன்மதனின் மலர்க் கணை, கடல் ஒலி, சைத்யோபசாரமாக யாம் இறைக்கின்ற பனி நீர், காம வெப்பத்தால் முத்துவடம் நீரான தூசி, இவற்றுள் ஒன்றே பேதையின் ஆவியை உண்டுவிடும் போலிருக்கிறதே என்று அயலவர் அறிய அன்னை உரைக்கின்றாள். ஈர நறுங் குழலாரே! என்றது காலையில் நீராடி வரும் நானக் கருங்குழல் தோழிமீர்காள்! அயற் சேரியீர்காள்! என்றபடி.

காலம்.

(கொளு)

வருவென் எனச் சொல்லிய மகிழ்நன் வாராமையின்
எரிதரும் அந்தி மாலை கண்டிரங்குதல்.

**எண்சீர்க் கழி நெடிலடி.**

தான்குதிக்கும் மந்தியும்இவ் வந்திக் காலம்
தழற்குதிக்கும் எனக்கடுவன் தழுவும் காலம்
தேன்குதிக்கும் இதழியும்பொன் சிதறும் காலம்
திருந்திழையார் விழிதாளம் சிந்தும் காலம்
நான்குதிக்கும் ஒழுங்குதிக்கும் படிமுக் காலம்
ஞானவரோ தயன்பாமா நகர்வாய்க் காலம்
வான்குதிக்கும் கடல்பருகிச் சிறந்திக் காலம்
மழைகுதிக்கும் காலம்அவர் மறந்த காலம். (69)

மந்தி தழற் குதிக்கும் என்று எண்ணி கடுவன் வந்து தழுவும் அந்திக் காலம் எனக் கூட்டுக. இதழி - கொன்றை மரம். பொன் சிதறும் - பொன் போன்ற மலர்களைச் சிந்தும். விழி தாளம் சிந்தும்-கண் முத்தம் சொரியும். நான்கு திக்கும் - நான்கு திசைகளிலும். ஒழுங்கு திக்கும் - நேர்மை நிறைந்திருக்கும்படி முக்காலம் - மாதம் மும்மாரி பெய்யும். ஞானவரோதயன் பா மா நகர் - நம்மாழ்வாரின் பாடல் பெற்றுச் சிறந்த பேரெயில் மாநகரம். வான், கடல் பருகிக் குதிக்கும் எனக் கூட்டுக. இங்ஙனம் மழை குதிக்கும் இக்காலம் அவர் மறந்த காலம் என்று சொல்லித் தலைவன் வராமை குறித்து இரங்குகின்றாள். இச்செய்யுளில் கலம்பக உறுப்பாக ஒரு காலம் பாட வேண்டிய ஆசிரியர், ஒன்பது காலம் காட்டிப் பாடுகிற நயம் காண்க.

பேரெயிலின் உயர்வு நவிற்சி.

**அளவடிக் கொச்சகக் கலிப்பா.**

மறம்புரியும் திகிரியொடு வலம்புரியும் தரித்தெவர்க்கும்
அறம்புரியும் குழைக்காதர் அருள்பேரை மாநகர்வாய்ப்
புறம்புரியும் மணிப்புரிசைப் பொறிசுமக்கும் துகிற்கொடிகள்
நிறம்புரியும் புயற்குளித்து நிணிலவும் துலக்குமே. (70)

மறம் புரியும் திகிரி - எதிரியை இருக்குமிடம் தேடிச் சென்று கொல்லும் சக்ராயுதம். வலம்புரியும் - வலம்புரிச் சங்கமும். திகிரி

யொடு வலம்புரியும் தரித்துக் குழைக்காதர் அருள் பேரை மாநகரம் எனவும் தனித் தனியாகக் கூட்டுக. புறம் புரியும் - சுற்றி வளைந்த. பொறி சுமக்கும் மணிப் புரிசை - இயத்திரப் பொறிகளையுடைய தாய் ரத்தினக் கற்கள் இழைத்துச் செய்த பொன் மதில். துகிற் கொடிகள் - அசைந்தாடும் வெண் பட்டுக் கொடிச் சீலைகள். புயற் குளித்து நிலவும் துலக்கும் - மேக மண்டலத்தில் நனைந்து சந்திர னின் மறுவைத் துடைத்து நிலவும் எறிக்கும் என்று மதிலின் உயர்வு நவிற்சி வந்தமை காண்க.

(கொளு)

பிள்ளையைவந் தணையெனப் பெருமானைத் தாய்
வேண்டுதல்.

## எழுசீர் வண்ணத் தாழிசை.

நீணிலாஎழும் பளிக்கு மண்டபத் திடையின் நின்றுதன் நிழற்கோலம்
காணிலாயிழை களிப்பம் என்றழைக் கும்என் கன்னியைத் தழுவாயே!
தூணி லாடகன் உரம்பி ளந்துயி ருண்ணத் தோன்றிய திருமாலே!
சேணு லாவிய தடம்பொ ழிற்பேரை வாழ்திருந் தெழிற் குரியானே.
(71)

பளிங்கு மண்டபம் - கண்ணாடி மண்டபம். பளிக்கு என வலிந்தது. களிப்பம் - விளையாடுவோம். இது மலையாள வழக்குச் சொல். தானவ சிசுவைக் காக்க விரைந்து சிங்கமாய் தூணில்த் தோன்றிய திருமாலே! இம் மானவ சிசுவைக் காக்க விரைத்து வர மாட்டாயோ! என்று தாய் வேண்டுகிறாள்.

(கொளு)

நெறியருமை கூறித் தலைவியின் நற்றாய்
இறைவனை இரவிற் றங்கிச்செல வேண்டுதல்.

## அறுசீர் வண்ண விருத்தம்

உரியை மாவுள ஒழுந தேனுள உறைகொள் கூவலின்வாய்
விரிவெண் நீருள பதியின் நீரினி விடியல் ஏகுகவே
அரிவை வாடினள் இறைவ! பேரெயின் அமலர் மால்வரைவாய்
இரவி போயினன் ஒருவர் போகிலர் எயினர் ஒலிகொடிதே. (72)

உரியை மா-தீஞ்சுவை மிக்க தினைமா. உறைகொள் கூவல்-உறைக் கிணறு. விரி வெந்நீர் - சூடான நீர். பதியின்-தென்திருப் பதியின் ஊருக்கு. விடியல் - வைகறைப் பொழுது. இரவி போயி னான் - சூரியன் மறைந்தான். மால்வரைவாய் ஒருவர் போகிலர் - மலை வழியில் வேடரும் ஒருவர் கூடச் செல்ல மாட்டார். இதில் சிறப்பும்மை தொக்கது. ஒஒ கொடிதே - வழி மிகக் கொடியதே. அதனால் நீர் 'செல்வேன்' என்று சொன்னதற்கே என் பெண் வாடி னாள். தேனும் தினைமாவும் தெளிந்த ஊற்று நீரும் உண்டு. இரவு தங்கி விடியல் ஏகுக. என்று கூறுகிறுன் தலைவியின் தாய்.

## எண்சீர்த் தாழிசைக் கட்டளைக் கலிப்பா.

கொடியளந்த அசோதையின் கைம்மா றஞ்சிக்
குழைதொடுங்கை மகரநெடுங் குழைக்கா தீர்!உம்
அடியளந்த உயிர்யாவும் வாழ எண்ணு
ழிகைகொள் எம்மரக்கால் பாய்ச்சி நீரே
படியளந்த வதுபோதா தன்னம் தான்நீர்
படைத்திருந்தும் பரிபா லனமோ ராமல்
மிடியளந்த வறிஞனைப்போல் காணும் நீங்கி
வெண்ணெய் கட்டும்உண்டிர் என்ன விநோதம்மே. (73)

'கருமுகைப் பூந்திருமேனி கன்றியிருக்குமே' என்னும் நினைவால் கொடியன் அந்த அசோதை என்கிறுர். ''கொடியாள் இடைச்சி ஏர்தாம்பா லடிக்க குழைந்து நின்ற வடிவா'' (பாமாலை யந்தாதி 45) ஒப்பு நோக்குக. கைம்மாறு - சிறு வளாறு (சிறு குச்சி). ''அடிக்கும் கைம்மாறோ? அஞ்சினைபோற் காது பிடிக்கும் கைம்மாறோ? பெரிது'' (30) என்றமை காண்க. எண்ணுல் நாளிகை -முத்பத்திரண்டு நாளிகை; எண்ணு - எண்ணி. கொள் நாளிகை - நீர் ஏற்ற நாளிகை. அம்மரக்கால் - ஒரு முகத்தலளவைக் கருவி. (நான்கு நாழி ஒரு சேர்ப்படி. எட்டுப்படி ஒரு மரக்கால்). அமரக் கால் பாய்ச்சி நீரே அடியளந்த அது - பொருந்த நீரே உம் காலைப் பரப்பிப் பூமியை அளந்த அது. உணவு மிகப் படைத்த செல்வரா யிருந்தும், அன்னப் பறவையை நீர் வேதம் ஓதப் படைத்திருந்தும். பரிபாலனம் - காத்தற்றெழில், பால்ச்சோறு. கட்டும் உண்டிர் - திருடியும் உண்டீர். (இது மலை நாட்டு வழக்கச் சொல்). என்ன விநோதம் - இது மிக ஆச்சரியம் என்றவாறு.

(கொளு)

நிலவும் தென்றலும் நீள்துயர் செய்தலின்
தலைவன் அணிந்த தார்பெற வேண்டுதல்.

**பன்னிரு சீர்க்கழி நெடிலடி**

என்னைத் தனியே நிசிநிலவுக்
கிரையிட் டிருக்கக் கடவீரோ?
எரிவாய் விடுக்கும் பனிவாடை
இளமைப் பயனும் மடநாணும்
தின்னக் கொடுத்து விடுவீரோ?
தீரா இடும்பை இவையனைத்தும்
தீர்க்கும் படிநும் செழுந்துளபத்
திருத்தார் கொடுத்து விடுவீரோ?
கன்னற் கணுவாய்ச் சாறொழுகக்
கதலிக் குலைவாய் அமிழ்தொழுகக்
கருங்கா வியின்வாய்த் தேனொழுகக்
கமலத் தலர்வாய்த் தாதொழுகச்
செந்நெற் குலைவாய்ப் பாலொழுகச்
செழுந்தார் மேதி புகுந்துழக்கும்
திரைநீர் பெருகும் வயற்பேரை
செல்வக் கருணைப் பெருமாளே. (74)

நிசி நிலவுக்கு - இரவு வேளையிலே தோன்றும் கதிருக்கு. எரிவாய் விடுக்கும் பனி வாடை - தீயை உமிழும் இளங்காற்று. தீரா இடும்பை - நீங்காத் துன்பம். துளபத் திருத்தார் - திருத் துழாய் மாலை. கன்னற் கணு - கரும்பு முட்டு. கதலிக் குலை - வாழைக் குலை. கருங் காவி - கருநீலப்பூ. கமலத் தலர் - தாமரைப் பூ. தாது - மகரந்தப் பொடி. செந்நெற்குலை - செந்நெற் கதிர்க் கற்றை. செழுந்தார் மேதி - (கழுத்தில் வெண்ணிற ஆரமுள்ள) எருமை, கருணைப் பெருமாளே - கருணை முகிலே என்றபடி. இச் செய்யுள்; சாறும், அமிழ்தும், தேனும், தாதும், பாலும் ஒழுகப்பாடி துளபத்தார் வேண்டுதலின் நயம் காண்க.

(கொளு)

தென் திசை நமனெனத் தென்றல் வந்திழுக்கக்
கன்றிய தலைவி கடலொடு புலம்புதல்.

## கட்டளைக் கலித்துறை.

மாவாய் கிழிக்கும் குழைக்காதர் பேரைவளை கடல்நீர்
நாவாய் படைத்தும் பயனென் கொலோ? நடுச் சொல்லறியீர்
பூவாய்க் குடைந்தும் செழுந்தா தளைந்தும் பொதியத்தென்றல்
தீவாய் மறலிஎனவந் திழுக்கும் அத்தென் திசைக்கே. (75)

மா-குதிரை வடிவாகி வந்த கேசி என்னும் அசுரன். நாவாய் - நாக்கு நீண்ட வாய்; ஓடம் என்ற மரக்கலம். நடுச் சொல்லறியீர் - நாம் ஆறி இருக்கும் பொருட்டு நடு நிலையில் நின்று பேசி, நீதி சொல்ல குழைக்காதர் பேரை எம்மிடைய வந்து சொல்ல அறியீர். பூவாய்க் குடைந்தும் - மலர்களின் மணம் பொருந்திய தேனிற் குளித்தும். செழுந்தாது அளைந்தும் - மகரந்தப் பொடி பூசியும். பொதியத் தென்றல் - தமிழுடன் பிறந்த தென்றல் காற்று. தீவாய் மறலி என - தீயுமிழும் யமன் போல. இழுக்கும் - வலிக்கின்றதே! பூவாய்க் குடைந்தும் தாதளைந்தும் தீவாய்த் தென்றல் எனக் கூட்டுக. வளை கடல் நீராதலின், குடிலர் ஆதலின் நடுச்சொல் அறியீர் போலும் என்று இகழ்ந்து புலம்புகிறுள்.

தழை

(கொளு)

தையலை விரும்பிய தலைவன் தழை எனும்
கையுறை கொண்டு கருணை செய வேண்டுதல்

## எண்சீர் சந்தத் தாழிசை.

தெற்குத்திசை நோக்கித்திரு வரங்கத்திடை துயில்மால்
தென்பேரையில் அன்பேறினர் செம்பொற் சிரிமடவீர்!
அற்பத்தழை யாயிற்களி ற்றுளைக்கிடொ ளுதோ?
அருமைப்பணி விடைக்கே உமதடியே னுளனன்றோ?
கற்பித்தன புரிவேன்கடி காவிற்றழை கொய்வேன்
காமன்கையில் விலையாயிரு காதோலையில் எழுதா
விற்கத்திரு வுளமோ?எனை மேவத்திரு வுளமோ?
வினையேனுறு பிழையாறுக விண்ணப்பம் உமக்கே. (76)

''தென்திசை இலங்கை நோக்கி'' (திருமாலை) ஒப்பு நோக்குக. திருமால் தென்பேரையில் அன்பேறினர், என்றது விண்ணாட்டிற் சால விரும்பி வந்து வீற்றிருந்தருளுகின்றமையின். மடவீர்! - உயர்த்தற்கட் பன்மையாகி வந்தது. அற்பத் தழையாயின் - சிறு தழையாயிருப்பின், களிற்றுனைக்கு இடஒணுதோ? ஆனை விரும்பிக்கொள்ளுமே என்கிருன். பணிவிடை - கைங்கரியம் (தொண்டு) கற்பித்தன - ஆணையிட்டவை அனைத்தும். கடி காவில்- மணங்கமழும் சோலையில். தழை - இளந்தளிர். இதுவே தழையாலாகும் பாவாடையைக் குறிக்கும். காமன் - மன்மதன். இரு காதோலை - இரண்டு காதணிகள். இரண்டு பனையோலை முறியில். எழுதா - விலைச்சீட்டு எழுதி. உறுபிழை - மிக்க பிழைகள். ஆறுக - பொறுத்து அருள் வீராக. உமக்கே விண்ணப்பம் செய்து கொள்ளுகிறேன் என்று தன் பணிவும் தலைவியின் உயர்வும் தோன்ற வேண்டுகிருன்.

### எழுசீர்ச் சந்த விருத்தம்.

கேச வா!மழை வள்ள லே!ஒரு கேழ லாயதிர் கொண்டலே
ஈச னேதிகழ் பேரை வாய்வரும் இறைவ னேஎன எண்ணியே
நாச வாழ்வைமு னிந்து நீர்அரி நார ணநம என்றுவாய்
பேசு வான்அறி கின்ற தேவுறு பிறவி வேர்அரி கின்றதே. (77)

கேசவா! - குழலழகுடையவனே! மழை வள்ளலே - ''ஆழி மழைக் கண்ணா!'' என்றபடி, (திருப்பாவை) ஒரு கேழலாய் - ஒப்பற்றவராக வடிவாகி. அதிர் - முழங்குகின்ற. நாச வாழ்வை முனிந்து - அழியும் இயல்புடைய வாழ்க்கையை வெறுத்து. அரி நாரண நம என்று - ஓம் நமோ நாராயணுய என்று. வாய் பேசுவன் - வாயினல் சொல்ல. உறு பிறவி வேர்அரிகின்றதே - மிக்க துன்பம் தரும் பிறவியின் கிழங்கு எடுப்பதாகும்.

சித்து

### ஐம்பத்து நான்கு சீர் வண்ணம்.

அரிபாலை நறுவூறு முதுதாழை கொண்டல்
முடிசூடி வெளிகிறி சுடர்கால்த டைய்யும்
புனம்மேவி விரிஞாழல் கனிசூத லம்பும்
முழுமுடும் விழஆடும் கழைதூணி ஆடி
அழல்சீறி நிழல்மாறி மலைவேக வெம்பும்
சரம்ஆறி நிரைஆயர் நிலமேத வழ்ந்தும்
தத்திவிழ் பொருநை வந்தநாள்

அலையேறு புதுநீரில் எதிர்ஏறி நின்று
வலைவாணர் புனல்சாய மணிவால சைந்து
கழைமாற விடுதோணி தடுமாற உந்தி
வரையானை கொடுபோன சுழியூட லம்பி
அதில்ஆர மணம்நாறும் மிகுசேற ளைந்து
முடிசூடும் நகைபோலும் நுரைமாலை சிந்த
முத்தவால் வளைக ரங்கவே

மருவாரும் மலராடை புனைமார்ப ணிந்தும்
துறையோடும் மருதூடும் விளையாடி யங்கும்
நிலையாத கயம்மூழ்கி அணைகோடு கண்டும்
மதகூடும் மடைதாழும் விளைமேடெ முந்தும்
வயலாமை கொழுமேழி முகவாய் மறிந்தும்
கருமேதி தடுமாறும் உறுவால்ம லங்கின்
எக்கர்பாய் மணல் மருங்குரு

மடல்வாழை குலைசாய நிலைசாய்க ரும்பின்
புடைசோலை வளர்பூகம் உடல்கூன உந்தி
தளைபீறி உமிழ்தேனின் மறிகால்த தும்ப
மடநாரை பெடைஓதி மலர்மேல்ஒ துங்க
வரிவாளை குதிபாயும் வளநாடு கந்தெம்
நெடுமாலும் வரும்பேரை நகர்வாழ்வு கந்த
சித்தரேம் அடிப ணிந்துகேள்

திருமார்பு பிரியாத மலர்மாதும் செம்பொன்
உருவான தொருவேரின் இதுமாலு கந்த
தொருமூலி தடவாமுன் அரனார்ப சும்பொன்
நிறமான பிரமாணம் மறைநூலில் உண்டு
சிலையான வடமேரு அரனாரு கந்த
துரையாணி ஒருகோடி பிழையாது செம்பொன்
வைத்ததார பெருமை உம்பரூர்?

சிறுகாலை நிறமான சனகாதி எங்கள்
குருநாதர் பதிவான ததிபார முண்டெம்
மதராசர் உபதேசம் இருபூம ருந்தின்
மடமாதர் உறவோடு விளையாடு கங்கள்
திரைதாவு கடலூடு படுதீவில் ஒன்றின்
பெயர்ஈழம் நவகோடி மணிசாடு கின்ற
வித்தைஒவு புதுமை நின்றுகேள்

சருவாமல் ஒருபூதர் அணுகாமல் அஞ்சு
தலைவாசல் அடைதாழி யருகேயி ருந்து
குகைமுடி உமிபோடு கரிபோடு செம்பு
அரிதாரம் முத்தாரம் பிரிதாமி ரும்பு
தனிலூத வடிவேறு தவருது செம்பொன்
இதுவார முடனேதும் உபதேச மந்த்ரம்
அப்பனே அமுதே உண்போமால்

தலைவாழை இலைமீது படைகோழி ஒன்றும்
பொலிகாடை இதுவாலி மிளகாணம் என்றும்
சருகாமை நெடுவாளை உயர்தாவு டும்பும்
கயல்தேளி சிறுசாளை பொடியாதி யுண்ணேம்
தயிர்மாறு பரிமாறு திரள்பால்சொ ரிந்து
பணியார வகையோடு நளபாக முண்டால்
அப்படா களப சந்தமே.

(இச் செய்யுளின் சிந்தடித் தொங்கல் வருமாறு.) தொங்கல்- குஞ்சம். வண்ணத்தின் தொங்கல்களைச் சேர்ப்பின் அவை கவியாதல் வேண்டும் என்பது இலக்கணம் ஆதலின், அவை சேர்த்துக் காட்டப் படுகின்றன.

*" தத்திவீழ் பொருநை வந்தநாள்*
*முத்தவால் வளைக றங்கவே*
*எக்கர்பாய் மணல்ம ருங்குருச்*
*சித்தரேம் அடிப ணிந்துகேள். "*

" வைத்ததார் பெருமை உம்பரூர்?
வித்தைஒவு புதுமை நின்றுகேள்
அப்பனே! அமுதே உண்போமால்
அப்படா களப சந்தமே." (78)

இனி சித்துச் செய்யுளின் முதலடிக் குறிப்பு :- அரிபாளை - சீவிய பாளை. நறவு - கள். முதுதாழை - விளைந்த தெங்கு. கொண்டல் முடி சூடி - மேகத்தைத் தலையிற் சூடிக்கொண்டு. வெளி கீறி - ஆகாயத்தைப் பிளந்துகொண்டு, சுடர்கால் தடையும் புனம் மேவி - சூரியனின் தேர்ச் சக்கரத்தைத் தடுக்கும் தினைப்புனச் சோலையை அடைந்து. ஞாழல் - நாக ஞாழல். சூது - சூதம்; மாமரம். கழைதூணி ஆடி - வரை மூங்கில் துணித் தொட்டிலிலிருந்து, ஆடி இறங்கி. அழல் சீறி நிழல் மாறி மலைவேக வெம்பும் சுரம் ஆறி - '' வேனிலஞ் செல்வன் சுவைத்து உமிழ் பாலை '' நிலத்தையும் குளிரச் செய்து. ஆயர் நிலம் - முல்லை நிலம். தவழ்ந்தும், தத்திவீழ் பொருனை - துணித்தொட்டிலாடித் தவழ்ந்தும், குறுநடை நடந்தும், அணைதத்தி வீழ்ந்தும், தாம்பிரவருணி நதியின் புதுநீர்ப் பெருக்கு வந்த நாளிலே. அலை ஏறு புதுநீரில் எதிர்ஏறி வலைவாணர் நின்று- திரை எறியும் நீர்ப்பெருக்கின் எதிர் நீந்தி பரதவர் நின்று மணி வாலசைந்து புனல் சாய கழை மாற உந்தி விடு தோணியின் - தோணியின் பின் புறமுள்ள வாலின் திருப்பத்தால் நீரொழுக்குச் சாய்ந்து ஓட இருபுடையும் மூங்கிற் கழியை மாறி உந்தவும். காட்டானையை இழுத்துக்கொண்டு கழிக்கும் கழியின் ஓசையோடும், சந்தனச் சேறு மணக்க, தலையணி மணியாகச் சூடும் சந்திர வில்லை முதலியன போன்ற நுரைகள் சிந்த, முத்துக்களை ஈனும் சங்குகள் சுழல என்றபடி. தூளியாடுதல், நீந்துதல், தவழ்தல்-தத்தி நடத்தல் முடி சூடும் திருக்குப்பூ, சந்திரவில்லை சிந்தல் முதலியன கூறிய நயம் காண்க.

இரண்டாம் அடிக் குறிப்பு :-

மலராடை புனை மார்பணிந்தும் - பூம்பட்டு உத்தரீயம் தரிக்கும் மார்புக்கு அலங்காரங்களைச் செய்தும். கூடுதிருப்புனல்த்துறையோடும், மருத நிலத்தினோடும் விளையாடி, அங்கும் நிலையாத கயம் மூழ்கி - (கடம்பாக்குளம்) போன்ற ஆழமான நீர் நிலைகளில் மூழ்கி எழுந்து. அன்ன கோடு கண்டு - நன்செய் நிலங்களின் கரை

களாகிற பள்ளியறை மெத்தை கண்டு. மதகு-சலதாரை. கண்ணறை விளைமேடு எழுந்து - மேட்டு நிலங்களான புன்செய் நிலங்களிலும் எழுந்து பாய்ந்து கொழு மேழி - இரும்பு முனையோடு கூடிய ஏர். மேழி முகவாய் வயல் ஆமையை மறித்துப்போடுகின்றதாம். மலங்கு - ஒரு வகை மீன். இதனைக் கண்டு கருமேதி தடுமாறுமாம். எக்கர் - சொரி மணல். மணல் மருங்குரு - பூமியில் நடவாத சித்த ராதலின் என்றபடி. கரும்பின் புடைவளர் பூகச் சோலை உடல்கூன உந்தி என்று கூட்டுக. மறிகால் - வடிகால். ஓதிப்பெடை - அன்னப் பேடு. வளநாடு உகந்து எம் நெடுமாலும் வரு பேரை நகர் வாழ்வுகந்த - (விண்ணுட்டிற் சால விரும்பி வந்து) திருவழுதி வள நாட்டில் தென்திருப்பேரை மாநகரத்தில் வீற்றிருந்தருள்கின்றமை யின். இங்கு வாழ்தலையே உகந்த. சித்தரேம் - அஷ்டமா சித்தியு முள்ளோம். அடி பணிந்து கேள் - பாதம் வணங்கி (குரு சீட முறையில்) நின்று கேள் என்றபடி இவ்வடியில் சிறுமி தாவணி அணிதல் நீராடி விளையாடி அணைகோடு காணுதல் முதலியன கூறிய நயம் காண்க.

மூன்றுமடிக் குறிப்பு.

திருமகளும் செம்பொன் வடிவானது ''உந்திக் கமல முதற் கிழங்கு'' என்னும் வேரினுலேயே. இதனைத் திருமாலே விரும்பி ஏற்றுக்கொண்டு விட்டார் என்றபடி. அரனுர் - சிவனுர். இவர், ''பொன்னுர் மேனியன்'' ஆனமைக்கு வேதத்திலேயே சான்று உளது. அச்சிவனுக்கு வில்லான மேரு மலை. செம்பொன் உரை யாணி ஒரு கோடி பிழையாது. வானுலகத்தைப் பொன்னுலகமாகப் பெருமை கொடுத்தது யார்? யாமே என்றபடி. சிறுகாலை நிறம் - அருணோதய நிறம் செம்பொன் நிறம். சனகாதி குருநாதர் ஒப்புக் கொண்டவை பல உள. மன்மதனின் உபதேசமாக. இருபூ மருந்து- அமிர்த சந்திர கலை. சோலதை என்னும் மருந்துக் கூட்டினுல், மட மாதர் உறவோடு உகங்கள் விளையாடு. (மெலியமாட்டாய் என்ற படி) ஈழம் - தீவுகளில் ஒன்றின் பெயர். நவ மணிகளும் பொங்கிக் குதித்து ஆடுகின்றன. இத்த வித்தை மிக்க ஆச்சரியம் ஆதலின், அவசரப்படாமல் சிறுகச் சிறுகக் கேள் என்றபடி.

இனி நான்காமடிக் குறிப்பு.

சருவாமல் - நழுவாமல். ஒரு பூதர் - ஒரு உயிரும் அஞ்சு

தலைவாசல்-பஞ்சேந்திரியங்கள் என்ற ஐந்து வாசல்களும். தாழிடு-தாழக் கோலிடு (திறவாமல் பூட்டுப்போடு) குகை மூடி உமி கரி போடு - (சமாதி அறையை மூடி) பஞ்சலோகங்களையும் உருக்கும் குகை என்னும் பாத்திரத்தை மூடி, உமி, கரி போடு. ''வெந்தழலில் இரதம் வைத்து ஐந்து லோகத்தையும் வேதித்து'' என்னும்படி, முத்தாரம் - ஸ்ரீ, பூமி, நீளை. பித்தளை வெண்கலம் வெள்ளி. அரி தாரம் - திருமகள், ஒரு மருந்து. செம்பொன் வடிவேறு தவருது - அனுகூலமாதல் தவருது. இது வாரமுடன் ஓதும் உபதேச மந்திரம்-இது வேதத்தில் கூறப்படும் ஓம் நமோ நாராயணுய என்னும் அஷ்டாக்ஷர மந்திரம். வாரம் - வேதம் ஓதும் முறை. அமுதே உண்போம் - பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணியதையே உண் போம், கோழி-வெள்ளைச் சேவல்; காடை - ஒரு பறவை. கதுவாலி-நீண்ட வால்போலச் சிறகுள்ள ஒருபறவை; கவுதாரி என்பர். மிளகு ஆணம் - தீயற் குழம்பு. சருகாமை - ஒரு வகை ஆமை. நெடுவாளை-நீண்ட வாழை மீன். உயர் தாவு உடும்பு - எந்த உயர்ந்த மதிலை யும் ஏறித் தாண்ட உதவும் உடும்பு என்றும் உயிரினம். இது ஆறு விரல்களை உடையது. கயல் - ஒரு வகை மீன். தேளி - திரளி மீன். சாளை - கெண்டை மீன். பொடி - சிறு மீன். இவைகளை ஒருபோதும் உண்ணமாட்டோம் என்று புலால் மறுத்தலைக் கூறுகிருர். தயிர் மாறு - தயிர்ச் சோறு. திரள் பால் சொரிந்து - வற்றக் காய்ச்சிய பாலை நிறையப் பெய்து. நளபாகம் உண்டால் - ததியன்னம் உண்போமானுல். அப்படா களப சந்தமே - கலவைச் சந்தனம் பூசுவாயாக. ஜீவகாருண்யம் மிகுதி தோன்ற மணல் மருங்குருச் சித்தரேம் என்கிருர்.

(கொளு)

தடஞ்சுனை நீந்திச் சந்தனச் சோலையில்
வடம்புனை ஊஞ்சல் ஆடுவோம் வருகெனத்
தடங்கட் டலைவியைத் தலைவன் வேண்டுதல்

## அறுசீர் விருத்தம்.

சந்தனக் காவினில் வந்து நிற்பீர்
தடங்குளித் தூஞ்சலின் ஆடிடுவோம்
பந்தடித் தாலிடை பற்ருதுநும்
பணியல காண்எழில் மாதரீரே !

என்திருப் பேரையில் ஒண்குழையர்
இருங்கிரிச் சாரலின் மீதினில்இம்
மைந்தனைச் சீறிநும் ஙிட்டுர
வஞ்சகக் காவிகள் தாவும்அம்மே. (79)

மாதரீரே ! நும் பெண்மைத் தன்மைக்கு ஏற்ற பணியன்று பந்தடித்தல். இடை இற்று விழும். உம் கண்களோ கொடுமையாக என்னைத் தாக்குகின்றன. ஆதலின், இனி நாம் நீர் விளையாடி ஊஞ்சலாடுவோம் வாரீர் என்று தன் ஆசை தீர வேண்டுகிறான் தலைவன். அம்மே! - வியப்புக்குறி.

மடக்கு

## எண்சீர்ச் சந்தம்.

| | |
|---|---|
| தாவி உண்பது றிமுகப் | பாலையே |
| சயன போகத் தலமுகப் | பாலையே |
| தேவி என்பதும் பங்சயத் | தாளையே |
| தேவருந் தொழல் பங்சயத் | தாளையே |
| யாவு மாய்வந்து திப்பது | மாயனே |
| என்று பன்னித் துதிப்பது | மாயனே |
| நாவி னோதுவ தும்திருப் | பேரையே |
| நாம்வ ணங்குவ தும்திருப் | பேரையே. (80) |

உறிமுகப் பால் - உறியில் வைத்த பால். தயிர் வெண்ணெய் முதலியவற்றையும் கொள்க. போக சயனத் தல உகப்பு ஆலிலையே ஆகும். தேவி - பிராட்டி. தேவி என்று சொல்லப்பெறுபவளும் ஸ்ரீ தேவியாகிற திருமகளே. தேவர்களும் கூடித் தொழுவது பாதமாகிற தாமரைகளே ஆகும். திருமாலே எல்லா அவதாரங்களையும் செய்பவன். என்று சொல்லித் துதிப்பதும் வசுதேவரே. நாவினால் ஓதுவதும் ஓம் நமோ நாராயணாய என்னும் பெயரே (திருமந்திரமே) ஆகும். நாம் வணங்குவதும் எப்பொழுதும் திருப்பேரை நாச்சியாரையே. தென்திருப்பேரையில் பெருமாளை வேண்டிச் செய்யும் எந்தப் பிரார்த்தனையும் திருப்பேரை நாச்சியாரின் ஆதிக்யம் தோன்ற திருப்பேரை நாச்சியார் சந்நிதியிலே நடைபெறுதல் இங்கு குறிப்பிடத்தக்கது.

(கொளு)

தலைவியின் நோக்கினாற் றாக்குண்ட தலைவன்
கலைவல பாங்கனொடு கழற்றெதிர் மறுத்தல்.

சிந்தடி.

பேரி யம்பிலன் பேரைமால்
வேரி யம்புயல் வெற்பில்வேள்
காரி யம்பறை கண்கள்வேல்
வாரி யம்பெனல் மானுமே ? (81)

தன் பெயர் இன்னது என்று சொல்லாதவளின் கண்கள் காமக் கலை கற்பிக்கின்றனவாயிருக்க அவற்றை வேலாயும், கடல், கணை, மான் என்று உவமை கூறுதல் பொருந்துமா? பொருந்தாது என்கிறான் தலைவன்.

(கொளு)

தலைவியின் தோழி தலைவன்பாற் சென்று
தலைவியைத் தழுவத் தானிரந்து வேண்டல்.

பதினான்கு சீர்க் கழிநெடிலடி.

மானுடன் பிறந்து கலையுடன் வளர்ந்த
மதியுடம் பழுக்கறத் துடைத்து
வள்ளையும் குமிழும் குமுதமும் பதித்து
மாசறக் கடைந்த வேற்கிடத்தி
கூனுடன் கிடந்த தடஞ்சிலை கொடுத்துக்
கொடுங்கொலைத் திலதமிட் டெழுதிக்
குருகுலப் பிரமன் அருமையிற் படைத்த
குளிர்முகத் திருவினைத் தழுவாய்
கானுடன் புகுந்து விராதனை வதைத்து
கவந்தனைக் கவர்ந்துசூர்ப் பணகை
கரியமுக் கரிந்து கானுயிர் குடித்துக்
கருங்கடல் வழிபடக் கடந்து
போனுடன் புகன்று புகுந்ததும் அவனைப்
புரந்தரன் பெருந்தவப் பயனாற்
பொருதவா! மகரக் குழையனே! கருணைப்
புனல்வளம் பொழியும் கார்முகிலே. (82)

மானுடன் பிறந்து - பெண் மான் போன்ற பார்வையுடைய திருமகளுடன் பாற்கடலிற் பிறந்து கலையுடன் வளர்ந்த மதி - நிறை மதி. பௌர்ணமி சந்திரன். அழுக்கு - களங்கம். முயற்கறை. வள்ளை - வள்ளைக் கொடி. இது காதுக்கு உவமை. குமிழ் - சிப்பி இனத்தில் நீண்டு மூக்குப் போல இருப்பது. குமுதம் - செவ்வல்லி, இது வாய்க்கு உவமை. வேல் - வேலாயுதங்கள் இரண்டு. இவை கண்களுக்கு உவமை. கொடுங் கொலைத் திலதம் இட்டு எழுதி - நெற்றியிற்றிலதமும், கண்ணுக்கு மையும் எழுதி இது கண்டாரைக் கொல்லும் இயல்புடையதாயிருத்தலின், கொடுங்கொலைத் திலதம் என்று விசேடித்தார். குருகுலப் பிரமன் - ஆசாரிய முதல்வனை திருமாலுக்குப் புதல்வனை பிரமன் என்றபடி. ''லக்ஷ்மீ நாத சமா ரம்பாம் நாத யாமுன மத்யமாம், அஸ்மத் ஆசாரிய பர்யந்தாம் வந்தே குருபரம் பராம்.'' என்பது காண்க. திருவினை - இலக்குமி போன்ற அழகியை. தழுவாய் - தழுவி அணைத்துக் கொள்வாயாக. உடன் கான் புகுந்து - கைகேயி ஏவுதலைக் காரணமாகக் கொண்டு முன்னமேயே திட்டமிட்டபடி ''இன்றே போகின்றேன்'' என்று வனம் புகுந்து விராதனைக் கொன்று, கவந்தனை வதைத்து, சூர்ப் பனகையின் மூக்கை அரிந்து, கரனை விண்ணுலகிற் கனுப்பி, கடலரசன் கைதொழ போனுடன் புகன்று புகுந்ததும்-இலங்கையை அடைந்ததும், அங்கதனைத் தூதனுப்பியும், முதல் நாள்ப் போரில் இராவணன் நிராயுத பாணியாகி நின்ற நிலை கண்டு இரங்கி ''இன்று போய்ப் போர்க்கு நாளை வா'' என்றியம்பி, அவன் மூல பலத்துடன் புகுந்தவுடன், புரந்தரன் பெருந்தவப் பயனால் - தேவேந்திரன் முன் செய்த தவத்தின் பயனாலேயே இராவண னைத் தொலைத்துக் கட்டிய மகரக்குழையணிந்தவனே! கருணை வளம் பொழியும் கார்முகிலே - அருள் பொழியும் காளமேகமே. என்றபடி. பிற்பகுதியில் இராமாணச் சுருக்கம் கூறினமை காண்க.

அம்மானை

காரையூர் வண்ணர்குழைக் காதர்சிலைப் போர்விசயன்
தேரையூர் மாலாய்த் திரிந்தனர் காண் அம்மானை
தேரையூர் மாலாய்த் திரிந்தனரே ஆயின் இவர்
பேரையூர் என்றுமுனம் பேசினதேன்? அம்மானை
பின்னைமால் கொண்டவர் என்பேசுகிலார் அம்மானை. (83)

''அம்மானை' என்பது கலம்பகத்தின் பதினெட்டு உறுப்புகளில் ஒன்று. இது மூன்று சிறுமியர் இருந்து அம்மானை ஆடும் பொழுது முதன்மையாக ஒருத்தி ஒரு வாசகம் பாட, இரண்டாவது ஒருத்தி, அதனை மறுத்துப் பாட, மூன்றாவது ஒருத்தி இருவர் பாடினதையும் பொருத்திப் பாடுவது.

இங்கு தோற்றார் வெற்றி பெற்றவரைச் சுமப்பது இயல்பாதலின், நிகரில் முகில் வண்ணனை மகர பூஷணப் பெருமானுக்கு நிறத்தாலும், குணத்தாலும் மேகம் தோற்றமை தோன்ற காரையூர் வண்ணர் என்ற நயம் காண்க. போர் விசயர் தேரையூர் மால் - பார்த்தசாரதிப் பெருமாள் ஆகிய கண்ணன். மாலாய் - விருப்பமுடையவராய் எனினுமாம். இனி, காரையூர், தேரையூர், பேரையூர் என ஊர்ப் பெயர்கள் தோன்றுதலும் காண்க இனி, பேரையூர் எனறு முனம் பேசினது என்? என்றது; ''பெண்ணுளன் பேறும் ஊர் பேரும் அரங்கமே'' (நாச்சியார் திருமொழி) என்ற படியும், பூமிப் பிராட்டியான திருப்பேரை நாச்சியார் கேட்டுக்கொண்டபடி அவளது ஆதிக்யம் தோன்ற திருப்பேரையே நம் ஊர் என்று ஒப்புக்கொண்டு பேசினபடியும் (திருப்பேரை தல புராணம்) பின்னை - நப்பின்னை. இளையாள். இங்கு, இலக்குமி தேவியைப் பெரிய பிராட்டியார் எனலும், பூமி தேவியைப் பிராட்டி எனலும் வைணவர் மரபு. ஆதலின் இளையாளிடத்து அதிமோகம் கொண்டவர் என்னதான் பேசமாட்டார்? எதுவும் பேசுவார் என்கிருள்.

(கொளு)

பாங்கனின் கழற்றுக் கெதிர் மறுக்கும் தலைவன்
ஈங்கியவள் முறுவலின் ஏற்றம் எடுத்துரைத்தல்.

**மருட்பா**

அம்மான் நகையும் அறவென்ற மால்பேரை
எம்மாவி உண்டதிவ ணகையே - பெம்மான்
வரிசிலை வடவரை வளைத்த பின்னர்த்
திரிபுரி செற்றதும் திரிபுன் னகையே. (84)

அம்மான் - கண்ணனுக்கு மாமன் கம்சன். ''கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமால்'' ஆதலின் அம்மான் நகை

யும் அறவென்ற பேரை மால் என்றூர். எம் ஆவி - என்று தம் ஆண் தன்மை தோன்றத் தலைவன் பன்மையிற் கூறுகிருன். இவள் நகையே எம்ஆவி உண்டது என்று முடிக்க. பெம்மான் - சிவ பெருமான். வடவரை வரிசிலை வளைத்த பின்னர் திரிபுரி செற்றதும் திரிபுன்னகையே - கோபத்தால் திரிந்த புன்முறுவலே என்றபடி. ''முந்தி என்னை அம் முறுவல் உண்டதே.'' என்ற கம்பன் வாக்கு நோக்குக.

(கொளு)

தலைவன் தலைவியின் நலம் பாராட்டுதல்.

## வெண்பா.

நகைத்தா மரைபுரைதாள் நாயகனூர் பேரை
அகைத்தா மரையமுதம் அன்னுள் - முகத்தழகு
தான்பிடித்த செவ்வித் தரம்பிடிக்க மாட்டாமல்
வான்பிடித்த தன்றோ மதி? (85)

முதலடிக்கு:- ஒளி மிக்க செந்தாமரைப்பூப் போன்ற திருவடி களையுடைய தெய்வ நாயகர் என்பது பொருள். இரண்டாவதடிக்கு; அகை தா மரை - உயர்ந்து தாவும் பெண்மான்; பார்வை போன்ற கண்ணழகுள்ளவளும், ஆராவமுதம் போன்றவளுமான தலைவியின் முகத்தழகையும்; என்பது பொருள். செவ்வித் தரம் - பருவத்தின் மேன்மைத் தரத்தையும், தான் பிடிக்க மாட்டாமல் - தான் பெற முடியாமல் தோற்று மதி வான் பிடித்ததன்றோ? என்பது: மூன்று நான்காமடிகளின் பொருள்.

(கொளு)

சிற்றிற் சிறுமியரைச் சிறுசோறிட வேண்டுதல்.

## ஒன்பதின் சீர் வண்ணம்.

மதிக்கும் பெருமாள் மதிவார்சடை
முடிக்கும் பெருமாள் அயனூர்இரு
வருக்கும் பெருமாள் எனமறைநூல்

துதிக்கும் பெருமாள் எளியோர்பிழை
சுமக்கும் பெருமான் தொழுவார்பவம்
தொலைக்கும் பெருமாள் பேரையிலே

குதிக்கும் கயல்போல் விழியீர்!கணித்
திறக்கும் குழையீர்! முளியீர்அனம்
கொதிக்கும் பதமே இதமறிவீர்
அதிக்கும் பசிஎன் னதுதோதையில்
அளக்கும் சிறுசோ றிடுமாறிடும்
அறத்தின் பயனு வதுவிதுவே. (86)

முதலடிக்கு; பூமியிலுள்ளோர் அனைவராலும் மதித்து வணங்கப்படும் பெருமாள். சிவபிரான் பிரமன் இவ்விருவருக்கும் பெருமாள் என்று வேதம் துதிக்கும் பெருமாள் என்பது பொருள். சுமத்தல் - பொறுத்தல். கணித்து இறக்கும் - கவனமாக இறக்கும் குழையீர்!- குண்டலமணிந்த சிறுமியர்களே!, சோற்றைக் குழையீர். முளியீர் - சோற்றைக் கருகவிடாதீர்; பரக்க விழியாதீர். இது நாட்டு வழக்கச் சொல். இதம் - ஹிதம், இப்பொழுது அனல் கொதிக்கும் பதமே இதம் - இன்னும் ஒரு தரம் கொதிப்பதுவே நல்ல பக்குவமாகும். அறிவீர் - அறிந்து கொள்வீராக. அதிக்கும் பசி - மிக்க பசி. தோது - அளவு. என்னது தோதையில் - என்னுடைய அளவு குருத்தோலை வட்டியால். அளக்கும் சிறு சோறு இடுமாறு இடும்- மாற்றிக் கொடுக்கும் சாத்த்தை உள்ளது போலக் கொடும் இச் செய்யுளின் முற் பகுதியிலே பெருமாள் என்னும் சொல்லை ஆறு தடவை பாடித் தத்த நயம் காண்க.

## அறுசீர் விருத்தம்.

வேயிருந் திசைத்த செவ்வாய் மின்னொடு பிறங்கும் மேகம்
பேயிருந் தலறக் கொங்கை பிசைந்துண்ட பேரை மாலின்
தூயபைந் துளசி நாறும் துணையடிக் கமலப் பூவே
மாயவெம் பவமாம் நோய்க்கும் வாகட மருந்து மாமே. (87)

வேய் - புல்லாங்குழல். மின்னொடு பிறங்கும் மேகம்- திருமார்பு இலக்குமியோடு விளங்கும் நிகரில் முகில்வண்ணன். பேய்-பூதனை என்னும் பேய். பேரை மால் - தென் திருப்பேரையில் எழுந்தருளியிருக்கும் மகர நெடுங் குழைக் காதர். நோய்க்கும் என்ற உம்மையால் உடற் பிணிக்கும், உள்ளத்தின் பிணிக்கும் என்றபடி. வாகடம் - மருத்துவ நூல்.

மதங்கு.

## பதினொன்கு சீர் அருஞ் சந்தத் தாழிசை.

மருதொ டித்து நெடிய சாடு மடிப டத்த வழ்ந்தமால்
வழுதி நாடு பாடி யாடி வந்த மாம தங்கியார்
முருகெ ழக்கி டந்த லைந்து முகிலு லாவும் அளகமே
முனிவ ருக்கும் மயல ளிக்கும் முகிழ்ந கைப்ர தாபமே
இருக வற்று முலைமு கத்தில் எழுதி விட்ட சாந்துமே
இளைஞ ரைத்தொ டர்ந்து கொல்லும் இன்ப வேலி ரண்டுமே
ஒருபி றைக்கொ ழுந்தில் அன்னை ஓதி இட்ட திலதமே
உயிர்ப றிக்கும் இயம னுக்கும் உபய வித்தை உணர்த்துமே. (88)

மருது - நள கூபரர்கள் என்ற இரட்டை மருத மரங்கள். சாடு - சகடாசுரன். நெடிய சாடு மடிபட மருதொடித்துத் தவழ்ந்த மால் என்று கூட்டுக. மதங்கியார் - ஆடிப் பாடும் பெண். உயர்த் தற்கட் பன்மை வந்தது. முருகு - வாசனை. முகிலுலாவு அளகம் - மேகம் போற் கருத்த கூந்தல். முனிவர் - முற்றத்துறந்தவர். மயல்- மையல், மயக்கம். முகிழ்நகை - புன்முறுவல். கவறு - சூதாடு கருவி போன்ற முலைகளிலே அணிந்த கலவைச் சாந்துப் பூச்சு என்ற வாறு. இன்பவேல் - கட்பார்வை. ஓதி இட்ட - மந்திரித்து இட்ட இயமனுக்கும் குரு என்னும்படி அன்னை மந்திரித்து நெற்றி யில் இட்ட திலகம் கொல்லுதலையும், காத்தலையும் கற்பிக்கும் என்றவாறு.

(கொளு)

தன்சூல் கண்ட தலைவன் பிரிவான்என
நெஞ்சூடல் கொண்ட நேரிழை தனக்கு
தன்சூழ் உரைத்துத் தலைவன் அளித்தல்.

## எண்சீர்க் கழி நெடிலடி.

மேலிருக்கும் மதிக்குழவி முடித்தார் போற்ற
வீற்றிருக்கும் குழைக்காதர் விமலர் நாட்டில்
சேலிருக்கும் விழியணங்கே நின்னை யல்லால்
தெய்வஅர மகளிரையும் தீண்டு வேனு?
மாலிருக்கும் இன்பதுன்பம் அறிந்தார் அந்தோ!
மணிவயிரம் குயின்றபொன்னின் வள்ளத் துள்ளே
பாலிருக்க, முகம்சுளிப்பப் பகுவாய் கைப்பப்
படுகொலைசூழ் நஞ்சைஅள்ளிப் பருகு வாரே. (89)

மேலிருக்கும் மதிக்குழவி முடித்தார் - மேற்றிசையில் காணப் படுகிற இளம் பிறைச் சந்திரனைத் தலையில் சூடிய சிவன். சேல் - கயல் மீன். அரமகளிர் - அழகிலும், ஆடலிலும் சிறந்த அரம்பை, ஊர்வசி மேனகை, திலோத்தமை எனப்படும் தேவ மாதர். தீண்டு வேனே - தொடுவேனே? மாலிருக்கும் இன்பம் துன்பம் - விருப்பம் தரும் பெருமை வாய்ந்த இன்பத்தையும், மயக்கம் தரும் துன்பத் தையும் அறிந்தார் - நன்கு அறிந்தவர். அந்தோ! - இரங்கற் குறிப்பு. பொன்னின் வள்ளம் - பொன் வட்டில் (தங்கக் கிண்ணம்) பாலிருக்க நஞ்சு பருகுவாரோ? என்பது பழமொழி. பருகவே மாட்டார்கள் என்று உலக வழக்கு கூறுமுகத்தால் தம் சூழுரைத்தல் காண்க.

(கொளு)

தலைவன் தன்னகர் அணிமை தலைவிக்குச் சாற்றுதல்.

### கட்டளைக் கலித்துறை.

பருந்தாட் கொடியுடை யார்குழைக் காதர் பதிப்புரிசைப்
பெருந்தாட் கொடியை அணங்கே! தண்சாரல் பிடி இணக்கும்
இருந்தாட் கொடிய கடக்களிறென்றும் இறைவர் தம்மைக்
கருந்தாட் கொடியிற் றுடக்கும் நும்மூரிற் கழைதொழுமே.

(90)

பருந்து - கருடப்புள். பதிப்புரிசை - கோயில்த் திருமதில். பிடியை இணக்க இருந்து ஆள் கொடிய மத யானை போலும், அதாவது, பெண் யானையை வசப்படுத்த காத்திருந்து ஆள்கின்ற ஆண் யானை போன்ற. இறைவன் - தலைவன். கருந்தாட் கொடி யின் துடக்கும்-கொடியினால்க் கட்டும். நும் ஊரிற் கழைதொழுமே- நும் குறிஞ்சி நிலத்தின் மூங்கில், எம் குழைக்காதர் பதிப்புரிசைக் கொடியை வணங்கித் தொழும் என்று கூறித் தன் நகர் அணிமை கூறினான்.

சுரம் போக்கு

### எழுசீர்ச் சந்தம்.

தழைக்காவ லானதழல் கதித்தேறும் பாலைவழி
கழித்தோமி ராமன் மயிலே!
தழைக்காவ லார்கமல மலர்த்தாளு ருமலொகு
சரத்தூரம் ஏகின் உளவே

குழைக்காதர் நாடுமுயர் திருப்பேரை யூரும்மணி
கொழித்தூறும் வாவி களும்நீள்
மழைக்கார்உ லாவுமலர் மணச்சூழற் காவும்இள
மரச்சோலை நீழல் களுமே. (91)

கழைக்கு - வற்றல் மூங்கிலுக்கு. ஆவலான தழல் - விருப்பமுடைய தீ. மூங்கில் ஒன்றோடு ஒன்று உரசின் இயல்பாகவே தீப் பிடிக்கும் ஆதலின் ஆவலான தழல் என்றார். கதித்து - கோபித்து. பாலை வழி - "வேனிலஞ் செல்வன் சுவைத்து உமிழ் பாலை" என்றபடி கொடிய பாலை நில வழி. இராமல் கழித்தோம் - இடையே தங்காமல் சுலபமாய் நடந்து கழித்துவிட்டோம். வழியின் கொடுமை தெரியாமல் பேசி அணைத்து வந்தான் என்பது குறிப்பு. இராமன் மயிலே! என்ற புணர்ப்பினால் சீதை என்ற பெயரும் தோன்ற வைத்த நயம் காண்க. இரண்டாம் அடியில்; மலர்த் தாள் - பூவின் மெல்லிய பாதம். உருமல் - வருந்தாமல். இனி, உன் பாதம் வருந்தாமல் யானே தூக்கிச் செல்வேன் என்பது குறிப்பு. ஒரு சரத்தூரம் ஏகின் - ஒரு அம்பு செல்லும் தூரம் சென்று சேரின். குழைக்காதர் நாடும், உயர் திருப்பேரை ஊரும் உளவே. வாவி - குளம். மணச் சூழல் கா - (மழை கவிந்து இருண்ட) "வாசமே கமழும் சோலை" இளமரச் சோலை - பூங்கா.

### எண் சீர்ச் சந்தம்.

மேதி பாசடைக் குவளை தின்றுவாய்
வேரி பாய்புனற் பேரை மாயனே!
தீது போகவும் பிறவி ஏகவும்
தேவ ரும்தொழும் செவ்வி மேவுதாள்
ஓதி மாதவள் கயிற்றிற் கட்டவும்
உரற்பி ணிக்கவும் சகடு தைக்கவும்
தூது போகவும் கடவ தோ?எனத்
தொழுது மாமறைச் சுருதி பாடுமே. (92)

மேதி - எருமை. குவளை - கருநீலப்பூ. செவ்விமேவுதாள் - மென்மை அழகு வாய்ந்த பாதம். ஓதிமாது - நீண்ட கூந்தலை உடைய அசோதை. சகடு - சகடாசுரன். சுருதி பாடும் - வேதம் போற்றும் என்றபடி.

(கொளு)

புனங்காவல் நீங்குதல் பூபனுக் குணர்த்தல்.

### வெண்பா.

பாடு குரலறியாய் பைங்கிளியே! செந்தினையின்
காடுபூங் காவறியார் காவலவர் - நீடசூரர்
வேரரிந்த மால்பேரை வெற்பிற் பிறகுறவர்
ஆரரிந்த வாறறியா யா? (93)

பைங்கிளியே! நீ, பாடு குரல் அறியாய் - இளங்கிளியே! நீ, இனி யாங்கள் பாடும் ஆலோலக் குரலைக் கேட்க மாட்டாய். பக்கங்களில் தினைக் கதிர்களையும் காணமாட்டாய் எனச் சிலேடை நயம் காண்க. காவலவர் - தினைப்புனம் காவல் புரியும் பெண்கள், அரசரும் குறியிடம் அறியார், என்றபடி. ஆர் - தினைப்புனம். கிளிக்குச் சொல்வது போல் பிறர் அறியாதபடி தலைவருக்குத் தான் புனம் காவல் நீங்குதலை உணர்த்துகிருள் தலைவி.

### அறுசீர் விருத்தம்.

அறிவிருந்த சிறுமதலைக் கிரணியன்தான்
அடர்த்தநாள் வெடித்த தூணில்
பிறிவிருந்த தேவகிபாற் கருவிருந்த
திருவயிற்றில் பிறந்த ஞான்றே
செறிதரங்க நிறைபொருநைத் திருப்பேரை
வளநகரும் சேடன் மீதும்
எறிதரங்கப் பாற்கடலும் எங்நெஞ்சும்
இவர்க்ககலா திடம தாமே. (94)

சிறுமதலை - தானவ சிசுவான பிரகலாதன் தானடர்த்த நாள் - தான் கட்டின தூணைத் தன் கையாலே தட்டி உடைத்த அப்பொழுதே. பிறிவிருந்த தேவகி - சிறையில் பிரித்து வைக்கப் பட்ட தேவகி என்றபடி. பிறந்த ஞான்றே - பிறந்தது முதல் அவதரித்த அன்று தொட்டே. செறிதரங்க நிறை - அடர்ந்து அலை எறிந்து கொண்டே இருக்கும். பொருநை - தாமிரவருணி ஆறு. சேடன் - ஆதி சேடன். ஈற்றடிக்கு, ''அனந்தன் பாலும் கருடன் பாலும் ஐது நொய்தாக வைத்து என் மனந்தன்னுள்ளே வந்து வைகி வாழச் செய்தாய்'' என்பதில் நோக்கு.

(கொளு)

அடக்கி வைத்த அன்னையை நோதல்

**எண் சீர்ச் சந்தத் தாழிசை.**

ககனர்முக் கணர்காண மதலையைச் சலியாது
　　தலையறுத் துடல்வேறு கறிசமைத் தவள்பாவியோ?
விகடமிட் டொருதேவி தசரதற் குயிர்போலும்
　　மகன்வனத் திடைஏக வினைவிளைத் தவள்பாவியோ?
மகள்எனக் கருதாமல் நிலவிலிட் டிளவாடை
　　வளையவிட் டநியாய மதனைவிட் டவள்பாவியோ?
நகரிமுத் தமிழ்ஞானர் பரவிடும் வயற்பேரையோ?
　　நடையனப் பெடைநீவிர் நடுவினிச்சொல வேண்டுமே.
(95)

சிறுத்தொண்டன் மனைவிக்கு விருந்து பேணிய பயன் கிடைத்தது எனலாம். கைகேயிக்குக் கணவனைச் "சொன்ன வண்ணம் செய்தவன்" என்னும் பெருமையை அடையச் செய்த பேறு கிடைத்தது. விகடமிட்டு - (கணவனுக்கு) தொந்தரவு கொடுத்து, என்பதுபொருள். உயிர் போலும் மகன்-"கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி என உயிர் இரக்கும் கொடுங் கூற்றின் உளையச் சொன்னான்" (கம்பன்) நகரி - ஆழ்வார் திருநகரி. தனக்கு ஒரு பலனும் இல்லாமல், நான் இன்பமாயிருக்கப் பொல்லாத தாய்க் கிழவி சம்மதிக்காமல், என் உடன் போக்கைத் தடுத்து, மன்மத பாணத்தால் என் உடம்பைச் சல்லடைக் கண்ணாகச் செய்து, நிலவுத் தீயிலிட்டு வாட்டிய கொடும்பாவியானாள் என்பது கருத்து. நடை அனப் பெடை!-நல்ல நடையுள்ள அன்னப் பேடை என்றவாறு. நடுவினிச் சொல வேணும் என்றது, நீதி சொல்லுங்கள் என்றபடி.

பாண்

பாணனைப் பழித்தல்

**பதினான்கு சீர்ச் சந்த விருத்தம்.**

மேரு வைப்பி ளங்கெடுத்து வேறு கூறு செய்வ போல்
　　வெஞ்சி னத்தன் இரணி யன்றன் மேனி யைப்பி ளந்துமுன்
கூரு கிர்த்த டங்கை கொண்டு கூறு செய்த பேரைமால்
　　குரைக ழற்பு கழ்ந்த பாடல் கொண்டு பெற்ற பரிசிலோ?
மூரி யற்ற விறலி யர்க்கு முன்ந டந்து செல்கையால்
　　மொய்ப்பி னிற்று திக்கை கொண்டு முடித்த லைசரீக் கையால்
பாரி புற்கை கொண்டெ ழுந்து பல்க டம்பெ ருக்கையால்
　　பரிசில் பெற்ற ய னை ரீதி பாண! நிற்கும் ஒக்குமே. (96)

• மேரு - (பொன்மயமான) மகாமேருமலை முதலடிக்கு. மேரு மலையை இரு கூறாகப் பிளந்தாற்போல கடுங்கோபங்கொண்டு பொன்னனாகிய இரணியனை இரு பிளவாம்படி அநாயாசமாகத் தம் நகத்தால்ப் பிளந்தார் என்பது பொருள். கூர் உகிர் - கூர்மை யான நகம். இரணியனை இரு பிளவாக முன் கீண்ட பேரை மால் குரை கழற் புகழ்ந்து பாடல் பாடிப்பெற்ற பரிசிலாயின் அது சிறப் புடையதாகும் என்பது இரண்டாமடியின் பொருள். பின்னிரண்டு அடிகளில் யானையின் செயலுக்கும், பாணனின் செயலுக்கும் சிலேடை கூறி, பாணனைப் பழித்த நயம் காண்க. விரலியர் - பாணிச்சிகள். மொய்ம்பு - வலிமை. துதிக்கை கொண்டு-புழைக்கை கொண்டு; துதி பாடுதலைக் கொண்டு. முடித்தலை சாிக்கை - கிரீடத் தோடு கூடிய தலையை வீழ்த்துதல்; குடுமியோடு கூடிய தலை வணங்குதல். பாரி - என்றும் வள்ளல்; புற்கை - தரும் உணவு; மனைவி தரும் கூழ். பல் கடம் - மும்மதம்; கடம் முதலான பலவித இசைக் கருவிகள். ரிதி - இயல்பு.

(கொளு)

தார் பெருத் தலைவி தென்றற்கு நோதல்.

**பதினான்கு சீர்க் கழிநெடிலடி.**

பாண்வாய்மி ழற்றும்சு ரும்பின் தொடவிரி
பங்கயத் தாதி றைத்தும்
பனிமலர்க் குவளையின் சேயிதழ்சு ரந்தசெழும்
பசுந்துளித் தேனை மாந்திச்
சேண்வாய்உ குத்தமதி அமிழ்தவெண் டுளியினிற்
சிதரும்மல் லிகைய விழ்த்தும்
செம்பொற்ற கட்டிற்க ருந்தாழை மடலினிற்
செறித்தபொற் சுண்ணம் ஆடி
தூண்வாய்ச மக்கும்ப ளிக்கறைப் பத்தியின்
சுவர்ப்புறத் திடைகு யிற்றும்
சுடர்மணிச் சாளரக் கண்வழிநு ழைந்தும்பூந்
துழாய்விரைபெ ருத மடவார்
நாண்வாய்கி ழித்தும்சி லைவேள்வில் நாண்ஏற்ற
நடக்கின்ற இளந்தென் றல்பார்
ஞானபுங் கவர்பரவும் பேரையம் பதிமுதல்வ!
நந்தாவ ளக்கொண் டலே. (97)

வாய் பாண் மிழற்றும் சுரும்பு - இசை பாடியே ரீங்காரம் செய்யும் வண்டு. பங்கயத் தாது - தாமரைப் பூவின் மகரந்தம். குவளையின் தேன் - கருநீல மலர்த் தேன். சிதரும் - உகுக்கும். மல்லிகை அவிழ்த்தும் - குட மல்லிகை முகையை மலரச் செய்தும், தாழை மடற் சுண்ணம் - செந்தாழம்பூவின் மகரந்தப் பொடி. சாளரக் கண்வழி நுழைந்து - ஜன்னல் பலகணி வழியாகப் புகுந்து. துழாய் விரை பெருத மடவார். நாண் வாய் கிழித்தும் - திருத் துழாய் மணம் பெருத பெண்களின் வெட்கத்தையும், வாய் பேசுதலே யும் கிழித்தும். சிலே வேளின் நாண் ஏற்ற நடக்கின்ற இளம் தென்றல் - மன்மதனின் கரும்பு வில்லின் நாண் ஏற்றும்படி மெல்ல மெல்ல நடக்கின்ற மந்தமாருதம் என்றபடி. தாதிறைத்தல், தேனே மாந்தல், மல்லிகை முகை முறுக்கவிழ்தல்; சுண்ணம் ஆடுதல், நுழைதல், நாண்வாய் கிழித்தல், நாண் ஏற்றல் இவையனைத்தும் இளமைப் பருவச் செயலாகத் தென்றலுக்கு ஏற்றிப் பாடிய நயம் காண்க. ஞான புங்கவர் - நம்மாழ்வார்.

(கொளு)

தலைவனின் பவனி விமரிசை கேட்ட
தலைவி நிலை மாறியதை நினைந்து தாயிரங்கல்.

**வெண்பா.**

நந்தா வளம்மிகுந்த நம்பேரை மால்பவனி
வந்தார் வளம்புகழ்ந்த வார்த்தைக்கே - செந்தழல்போல்
வன்னமா யங்குதித்த மாமதிகண் டாள்மதலைக்
கென்னமா யங்குதித்த தே? (98)

நந்தா வளம் மிகுந்த நம்பேரை - என்றும் நீங்காத வளம் மிக்க தென்திருப்பேரை. பவனி - உலா. உலாவைப் புகழக் கேட்ட வுடனேயே தலைவிக்கு நிலவு தீயாகத் தோன்றியதாம். என்ன மாயம் என்று வியக்கிருளாம் அத்தலைவியின் தாய். இங்ஙனம் சிறுமியின் நிலை மாறியதற்கு இரங்குகின்றுள் தாய்.

(கொளு)

பொருள் வயிற் பிரிவை அஞ்சிய தலைவி
ஒருங்கி உடன்வா அன்புடையவன் மறுத்தல்.

### எழுசீர்ச் சந்த விருத்தம்.

குதிக்கும்கவுள் மதத்தண்டுளி மழைக்குஞ்சரம்
அழைக்கும்புயல் கொழிக்கும்தமிழ் வளர்பே ரையிலே
மதிக்கும்பொருள் மிகப்பெண்டுகள் துதிக்கும்படி
தழைக்கும்குடி வளர்க்கும்திரு மடமா மயிலே !
மிதிக்கும்படி விதிக்கும்சிறி தனிச்சங்கலை
பணிப்பஞ்சினை வவறுக்கும்பதம் உனதா கையினல்
உதிக்கும்கதிர் வெதுப்பும்பரல் கொதிக்கும்சுரம்
நடக்கும்தொறும் உறுத்தும்பொழு துடல்வா டுவையே.
(99)

கவுள் மதம் ஒன்றே கூறினர் எனினும், கபால மதம் பீஜ மதம் இரண்டும் அதனுள் அடக்கம். இவைகளே யானையின் மும் மதங்களாகும். குஞ்சரம் - கஜேந்திரன். பெண்கள் மிக மதிக்கும் பொருள் என்றும், குடி தழைக்கும்படி திருவளர்க்கும் படமயிலே, என்றும் கூட்டுக. பொருளுடையார், அறமும் இன்பமுமாகிய இரு தலையையும் அடைவர் என்பது நீ, அறிவையே எனபது குறிப்பு. பின்னிரண்டு அடிகளில் தலைவியின் பாதம் அனிச்சப் பூவையும், பணிப் பஞ்சினையும் கூட உறுத்தும் என்று வெறுக்கும் இயல்பு கூறி, சுரத்தின் கடுமையையும் சொல்லி, நீ உடன் வருவாயானல் உடல் கன்றி வாடுவை என்று தன் அன்பு தோன்ற மறுக்கும் நயம் காண்க.

(கொளு)

நினைவின் நீங்கா மகரவண் குழையர்
கனவுதந் தருளுதலைக் காரிகை வாழ்த்தல்.

### ஆசிரியப்பா.

வாடைவந் தியங்கப் பீடைகொண் டுளத்தை
தென்றலங் கன்று மென்றுதின் றுமிழ்ந்து
கோதுபடும் ஆருயிர்க் குறையுங்கை குவித்துக்
குழித்துவிரல் சுழித்துக் குறைத்தமணற் கூடலும்
அள்ளி யிட்ட புள்ளியம் பசலையும்

துயிற்சுவை அறியா துயிர்ப்புறு சடலமும்
மறவா அன்பிற் றுறவா உள்ளமும்
அன்னப் பேடும் புன்னையங் காவுமே
துணையென இருந்து துயருறுங் காலத்தும்
பழுதிலா துயர்ந்த வழுதிநாட் டெவற்றையும்
யாரையும் முத்தமிழ்ப் பேரையும் புரக்கவே
வளநகர் வருகுழைச் சிகரபூ தரத்தன்
தெய்வ நாயகன் ஐவர்தேர்ப் பாகன்எம்
அரசாள் வார்தண் மலைச்சா ரலின்கண்
மணங்கொள் பூங்கொடி இணங்குதண் பொதும்பரிற்
சிறந்த காட்சியிற் பிறந்ததண் ணளியின்
கைதொட்டுத் தலைவர் மெய்தொட்டுப் பயில
பணைமுலைக் குரும்பை இணைமலைப் புயத்தின்
ஊடுறப் பொருது பாடுறக் கிடப்ப
வரிவளைத் தழும்பு மறுபுறத் தழுந்தப்
பரிபுரச் சிலம்பொடு பல்கலன் அலம்ப
கலவியும் புலவியும் பொருந்திநாற் பொருள்களின்
நலமிகு பெருஞ்சுவை நமக்கினி தளிக்கச்
சிறுதுயிற் கனவு தந்தருளும்
மகர வண்குழை வாழி வாழியவே. (100)

இச் செய்யுளில், இக்கலம்பகத்தில் வந்துள்ள பல அகப் பொருள் துறைகளையும் ஒருங்கே அமைத்துக் காட்டும் நயம் காண லாகும். இச் செய்யுளை, நாச்சியார் திருமொழியில், ''கனாக்கண் டேன்'' என்றது போல தாமும் கனவு கண்டதாகக் கூறி கனவு தந்த மகர நெடுங் குழைக் காதரை வாழ்த்திப்பாடி ஆசிரியர் நிறைவு செய்கிறார்.

இனி இச் செய்யுளின் முதல் இரண்டடிகளுக்கு, ''எரிவாய் விடுக்கும் பனி வாடை இளமைப் பயனும் மட நாணும் தின்ன'' என்றதில் நோக்கு. (பாடல் 74.)

மூன்று நான்கு அடிகளுக்கு, ''இழைத்திருபார் மணற் கூடல்'' (14) என்றதில் நோக்கு.

ஐந்தாவது அடிக்கு, ''மால் பவனி வந்தார் வளம் புகழ்ந்த வார்த்தைக்கே...... மதலைக்கு என்ன மாயம் குதித்தது?'' (98) என்றதில் நோக்கு.

ஆறுவது அடிக்கு, "முடிவிலாக் கங்குல் வெடிவிலாத் தன்மை ஏது?" (25) என்றதில் நோக்கு.

ஏழு, எட்டு அடிகளுக்கு, "மடப்பெடையன்னங்காள்! மறந்தால் நினைக்கவும் நினைந்தால் மறக்கவும் மனத்தான் எமக்கும் இலையே." (34) என்றதில் நோக்கு.

ஒன்பது, பத்து, பதினொன்று, பன்னிரண்டு அடிகளுக்கு, "எம் நெடுமாலும் வருபேரை நகர் வாழ்வு" (78) என்பதில் நோக்கு.

பதின்மூன்றும் அடிக்கு, "சிலைப் போர் விசயன் தேரையூர் மாலாய்த் திரிந்தனர்" (அம்மானை) என்றதில் நோக்கு.

பதினான்கு, பதினைந்து, பதினாறும் அடிகளுக்கு, "இன்னமிர்தே தழைய வந்தொரு பொழிலின் நின்றது தனி இளங் கொடியே?" (63) என்றதில் நோக்கு.

பதினேழாம் அடிக்கு, "வேர் திருநெற்றியிற்றிலதம் அழிக்கிற்றுடைப்பன் அழகே" (62) என்றதில் நோக்கு.

பதினெட்டு முதல் இருபத்திரண்டாம் அடிகள் வரை, "கனவட்ட முலைத் திரள் பட்டுருவி", (57) "சிற்றின்ப மோக வாழ்வை" (15) என்பவற்றில் நோக்கு.

நாற்பொருள்களின் நலமிகு பெருஞ்சுவை - அறம், பொருள், இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள்களில் "ஆமது காமம் கண்ணனுக்கே" என்றபடி இன்பமயமானது.



(ரு-8)



## வாழ்த்து.

## வெண்பா.

வாழிபுகழ்ப் பேரை மகரக்குழை வாழி
வாழிதமிழ் நூற்றெட்டு மாமறையோர் - வாழியவே
தேக்கும் பதகமலம் தீர்த்தெமது சிந்தையுளே
பூக்கும் பதகமலப் பூ. (101)

புகழ்ப் பேரை வாழி - செவ்வத் திருப்பேரை என்று புகழப் படுகிற திருப்பேரை நாச்சியார் வாழி. அவர்பால் விசேஷ அன்பு காட்டுகின்ற மகரக்குழை வாழி - மகர நெடுங்குழைக்காதர் வாழி. தமிழ் நூற்றெட்டு மாமறையோர் வாழியவே - தென்திருப்பேரை யில் வாழும் செந்தமிழ் வேதியரான நூற்றெட்டு சாம வேதியரான ஸ்ரீ வைணவர்கள் வாழி. பற் பல பிறவிகளில் தேக்கி வைத்திருக் கும் பாபங்களைத் தீர்த்து எமது சிந்தையில் மலர்கின்ற திருமால் திருவடித் தாமரைகள் என்றைக்கும் வாழியவே என்றபடி.

*மகர நெடுங் குழைக்காதர் கலம்பகமும் குறிப்புரையும் நிறைவு பெற்றது.*

